கடவுள் துணை.

# மூன்றாவது பாகம்

## யோக ஞான சாஸ்திரத் திரட்டு

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத் ததிபர்களுக்கும், புஸ்தக வியாபாரிகளுக்கும், இன்னும் மற்றுமுள்ள மகான்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்த "யோக ஞான சாஸ்திரத் திரட்டு" என்னுமிப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கிற சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற ஒவ்வொரு மகான்களிடத்திலும் ஓலை ஏட்டுப் பிரதிகளைச் சகல சுதந்தரத்துடன் பெற்று, என் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலையேட்டுச் சாஸ்திரங்களையுஞ் சேர்த்து, இந்நூலுக்குப் போதுமான திரவியத்தைச் செலவுசெய்து என்னால் (கெவர்ன்மெண்ட் சட்டப்படி) ரிஜிஸ்தர் செய்திருப்பதால் இச்சாஸ்திரங்களைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடாதென்பதை இதன்மூலமாய்த் தெரிவித்துக்கொண்டேன்.

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப், புதுமண்டபம், மதுரை.

மூதற்பாரம்

கடவுள் துணை.

# முகவுரை.

உலகின்கண் சர்வேஸ்வரனால் உற்பத்தியாக்கப்பட்டபலவுயிர்களினும், சுவேதஜம்-அண்டஜம்-உற்பீசம்-சராயுஜமாகிய நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்கு லட்சம் ஜீவாசிகளிற் சிரேஷ்டமானது இம்மானிடப்பிறவியேயாம்; இதில்ஜெனிக்கும்சிசுக்கள்-பாலர்-குமாரர்-எவ்வனர் விருத்தர்களாகிய ஆண்பெண்ணினங்களுக்குரிய சகலசுகதுக்கங்களையும், தர்மார்த்த காமமோக்ஷமர்மங்களையும், இகபர சாதனங்கட்குரிய இயல்பினையும், எண்ணிலாப் பிறவித் துன்பங்களையும், இஷ்ட காமியார்த்த இன்ப ரசங்களையும் எடுத்துக்கூறிய நூல்கள் பலவாயினும், அவற்றினை இனிது விளங்கக் கூறுவன: அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவாயுள்ள சின்மய சொரூப நிலையைப்பெற்ற தேவ, ரிஷி, முனி, சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய யோக ஞான சாஸ்திரங்களேயாம்.

இவ்வித சாஸ்திரங்களை வெளிவிடாது நமது முன்னோர்கள் தொன்றுதொட்டு ஓலைஏடுகளிலெழுதி, வீடுகளில் காலைமாலை பூசையில் வைத்துப் பூசித்து வாசித்து வருவது யாவருக்குந் தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட அரிய சாஸ்திரங்கள் நமது நண்பர் இ. ராம. குருசாமிக்கோனார் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலை ஏட்டுப்பிரதிகள் பலவாம். அவற்றுட்சிலவற்றையும், கனம் ந. ராம. கணபதியாபிள்ளை யவர்களிடத்திலும், என்னிடத்திலும் கைவசமாயிருந்த ஓலைச்சுவடிகளையும் ஒருங்கே திரட்டிப் பார்க்கையில், பதினெண் சித்தர்கள் பாடல்களிற் சில இருந்தும் சில இல்லாதிருக்கவே அதையுஞ் சேர்த்து அச்சிடக்கருதி "சொல்லும் பொருளுஞ் சுவையுங் கனியும், எள்ளும் ஒளியும் இருப்பது போல, என்பாற் பிரியாதெழில் நட்பதனை, அன்பாற் கொண்ட அருமை நண்பர்" இ. ராம. குருசாமிக்கோனாரிடம் வெளியிட, அவரு மதற்கிணங்கி பல தேயங்களிற்சென்று சில ஏடுகளைச் சேகரித்துக் கொண்டு வந்தனர். அச்சமயம் தெய்வ கடாக்ஷத்தால் திருப்பழனியின்கண் வசிக்கும் ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ கைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்கள் தமது ஆச்சிரமத்

திற் கையாண்டுவந்த பலசாஸ்திரங்களடங்கிய ஏட்டுச் சுவடிகளை வரப்பிரசாதத்துடன் கொடுத்து, அச்சிடும்படி உதவி புரிந்தனர்கள்.

எல்லாச் சுவடிகளையும் காயிதத்தில் எடுத்தெழுதிப் பார்க்கையில் அதிற் சில சாஸ்திரங்களில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு செய்யுட்களில் இரண்டு வரியும் மூன்று வரியுமாக இருந்ததுடன், சிலபாக்களில் எதுகை மோனைகளேதுமில்லா திருந்தன அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டி, இப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கும் ஒவ்வொரு சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற நமது ஆத்ம நண்பர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒரு பிரதிக்கு நாலு ஓலையேட்டுப் பிரதிகளைப் பெற்று அவற்றுள் வரைந்துள்ள விதப்பிரகாரம் அனேக மகான்களின் உதவியைக்கொண்டு என் சிற்றறிவுக் கெட்டியவாறு சீர்திருத்தஞ் செய்ததுமன்றி, இதற்கு தேவ ரிஷி முனி சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய "யோகஞான சாஸ்திரத்திரட்டு" எனத் திருநாமஞ் சூட்டிப் பன்னிரண்டு பாகங்களாக அச்சிட்டிருக்கின்றனன்.

இச்சாஸ்திரங்களை யெல்லாந் திரட்டி ஒன்று சேர்த்து அச்சிடுவதற்காகப் பொருட்செலவும், தேகப்பிரயாசையும் எடுத்துக் கொண்டு சதா துணைக்கருவியாயிருந்த மதுரை புதுமண்டபம் புஸ்தக வியாபாரியும், ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ் சொந்தக்காரருமாகிய நமது நேயர் இ. ராம. குருசாமிக் கோனாரவர்களது நன்றியும், தாலபத்திர சாஸ்திரச் சுவடிகளுதவிய ஏனைய நண்பர்களது நன்றியும் யான் என்றும் மறக்கத்தக்கனவன்று.

இவ்விதம் பன்னிரண்டு பாகமாய் அச்சிட்டிருக்கிற இவ்வரிய பெரிய சாஸ்திரங்கள் ஒரு புஸ்தகத்திலிருப்பது மற்றொரு புஸ்தகத்திலில்லாதிருப்பதால், பன்னிரண்டு வாலியத்தையும் பார்ப்பது அவசியம். ஆகையால் ஒவ்வொருவரும் இதனை வாங்கிக் கையாண்டு வருவீர்களென நம்புகின்றனன்.

இங்ஙனம்,
த. குப்புசாமி நாயுடு,
மதுரை.

உ

கணபதி துணை.

# மூன்றாவது புஸ்தகம்.

## தேவ ரிஷி முனி சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய யோகஞான சாஸ்திரத் திரட்டின்

### அட்டவணை.

உ

குருவே துணை.

தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# யோக ஞான சாஸ்திரத் திரட்டின்

நான்காம் பாகத்தில் சொல்லியிருக்கிற

## முக்கிய விஷயங்கள்.



ஐயா! இதற்கடுத்த நான்காம்பாகத்தில் மச்சமுனி. வேதமுனி, துர்வாசமுனி, பூகிமுனி, வசிஷ்டமாமுனி, பாம்பாட்டிச்சித்தர், ஞானச்சித்தர், சுகப்பிர்மரிஷி, கூர்மானந்தர், சூரியானந்தர், கண்ணானந்தர், அசுவினிதேவர், பாராசர், தேரையர் முதலிய மேலான தேவ ரிஷிகளாற் சொல்லப்பெற்ற அருமையான இருபத்தைந்து சாஸ்திரங்கள் அடங்கியுள்ள விஷயங்களை இதனடியிற் காணலாம்.

அவையாவன:

முதலாவது மச்சமுனிவர் மூலஞானம் பத்தில், இடகலை பிங்கலை சுழிமுனைக்குரிய வாசியோகசாதன கேசரி மார்க்க முதலிய விபரங்களையும்,

௨-வது மச்சமுனிவர் சூட்சுமஞானம் பத்தில், கற்பமுறையும், சிவயோகி அனுஷ்டிக்க வேண்டிய குளிகைகளும், ஞானசோதி சித்தியும், சமாதி தசதீட்சை முதலிய விபரங்களையும்,

௩-வது மச்சமுனிவர் காரணஞானம் பத்தில், நான்குவேத பிரணவமுடிவையும், ரவிமதி சுடர் கேசரி தெரிசனமும், அஷ்டாங்க யோகசித்தியின் விபரங்களையும்,

௪-வது மச்சமுனிவர் தீட்சைஞானம் ஐம்பத்தைந்தில், பஞ்ச பூததேவதையும், பானுபிறை அக்கினியென்ற நாடியும், பத்துவாயுவும் பகருதற்கரிய நந்திதெரிசன விபரங்களையும்,

௫-வது மச்சமுனிவர் ஞானதண்டகம் தொண்ணூற்றேழில் அஷ்டமாசித்தி கருக்குரு கற்பம் வாதம் மை மெழுகு மூலிகை வேரு ரேசக பூரக கும்பக மூலாட்சர யோக ஞான சாதன விபரங்களையும்,

6-வது மச்சமுனிவர் ஞானதீட்சாவிதி நூறில், நந்திதெரிசனமும், குண்டலிசத்தியும், ஆதியந்தம் பூரணசோதியும், அறுகோணத்தியல்பும், வாதமுறை கருமானம் வாசியின்தீட்சை விபரங்களையும்,

7-வது வேதமுனிவர் ஞானசூஸ்திரம் இருபத்திநான்கில், அடிநடுமுடி பாவெளி ரசகுளிகை சூடாமணிமாத்திரை விபரங்களையும்,

8-வது தூர்வாசமகாரிஷி ஞானசூஸ்திரம் எழுபத்தேழில், வழலை குரு சவுக்காரம் மயிற்பாலம் நெருப்பாறு செயநீரும், சுண்ணமுடன் சிலவேலை விபரங்களையும்,

9-வது யூகிமுனி தத்துவஞானம் நூற்றைந்தில், யோக ஞான சாதனங்களுக்குரிய மூலாட்சரங்களும், மூலாதாரத்தின் முடிவும், பஞ்ச பூதங்களுக்குரிய அஞ்சு தேவதைகளும், இடகலை பிங்கலை சுழிமுனை சோதிசொரூபமும், ஜனங்க ளுற்பத்தியும், தத்துவம் தொண்ணூற்றாறும், சரீர மர்ம முதலிய விபரங்களையும்,

10-வது வசிஷ்டர் ஞானோதயம் பதினாறில், அறுகோண சக்கர மூலாட்சரங்களையும், ஆதியாஞ் சோதி தெரிசன யோக சாதனை முதலிய விபரங்களையும்,

11-வது வசிஷ்டர் வைத்திய சூஸ்திரம் இருநூற்றியாறில், செயநீர் சுண்ணம் செந்தூரம் மெழுகு தாம்பூர வங்கதங்க பற்பங்களையும், கிசாயம் லேகியம் சூரணம் முதலிய அவிழ்தங்களைச் செய்பாகம் கைபாகமாய்ச் செய்து பலவித ரோய்களைப் பறக்கச் செய்யும் பலவித விபரங்களையும்,

12-வது பாம்பாட்டிச் சித்தர் ஞான சூஸ்திரம் பதினாறில், யோக சாதன மர்மங்களின் வல்லப விபரங்களையும்,

13-வது பாம்பாட்டிச் சித்தர் பாடல் முந்நூறில், பிரபஞ்சம் பொய்யென்றும், பிர்மமொன்றே மெய்யென்றும் அப்பிர்மத்தைச் சாரும் விபரங்களையும்,

14-வது ஞானச்சித்தர் மெய்ஞ்ஞானம் பன்னிரண்டில், யோக ஞான சாதனங்களுக்குரிய விபரங்களையும்,

15-வது ஞானச்சித்தர் பாடல் முப்பத்தைந்தில், சிவயோக ஞான பிரமநிலை விபரங்களையும்,

16-வது சுகப்பிரமரிஷி ஞான சூஸ்திரம் முப்பத்திரண்டில், அருசு சுண்ணம் குரு குளிகை வேதை கற்பம் செய்முறை முதலிய விபரங்களையும், யோகசாதனத்துக்குரிய விபரங்களையும்,

17-வது கூர்மானந்தர் மவுனஞானம் ஐந்தில், மூன்றெழுத்தும் ஐந்தெழுத்தும், வாலை சித்தி முதலிய விபரங்களையும்,

18-வது கூர்மானந்தர் ஞானசூஸ்திரம் ஐம்பதில், வாதவைத்தியம், காய கற்ப முறைகளையும். யோக சாதன மூலமந்திர விபரங்களையும்,

19-வது சூரியானந்தர் ஞான சூஸ்திரம் பதிமூன்றில், பூநீர் வழலைகுரு அண்டபிண்டம் உப்பு காயசித்தி மூலசுத்தி மூலமந்திர முதலிய விபரங்களையும்,

20-வது சூரியானந்தர் கற்பஞானசூஸ்திரம் இருபத்தைந்தில், காயசித்தி யோகசாதனம் மெவுனகுளிகைமுதலிய விபரங்களையும்,

21-வது கண்ஞானந்தர் சிவராஜயோகம் பதினொன்றில், யோக சாதனத்துக்குரிய மூலாட்சரங்களையும்,ஞானசித்தி விபரங்களையும்

22-வது அசுவினி தேவர் சிவயோக கற்பம் பதினாறில், வாசிநிலை யோக சாதனங்களுக்கு வேண்டிய விபரங்களையும்,

23-வது பராசரிஷி ஞானோபதேசம் இருபத்திரண்டில், பூரண வஸ்துவைக்காணும் ஞானசாதன விபரங்களையும்,

24-வது தேரையர் நவலோக பற்பம் பதினாறில், இரும்பு பித்தளை ஈயம் வெள்வங்கம் திராவுருக்குச் செம்புடன் நாகம் வெள்ளி முத்து வெண்கலம் தங்கம் முதலிய நவலோகங்களையும், நன்றாய்ச் சுத்திமுறையுடன் பற்பஞ்செய்யும் விபரங்களையும்,

25-வது தேரையர் சிவபூஜாவிதி எழுபத்தைந்தில், சிதம்பரச் சக்கரம், அஷ்டகர்மம், தேவிபூஜாவிதிக் கிரமங்களையும், சித்தியிற் சிறந்த யோகசித்தி காயசித்தி அஷ்டமாசித்தி முதலிய அநேக நுட்ப விபரங்களையும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

முன்னர் சொன்ன மூன்று பாகங்களிலும் ஒழுங்காயுரைத்துள்ளதை, நன்றாய்த் தெரியவேண்டுமானால் நான்காம் பாகத்தை வாங்கி வாசிக்க நன்குவிளங்கும். தவசிரேஷ்டரின் சாதுரிய வாக்கியத் தன்மையை இதனாலறியலாம். ஆகையால் யாவரும் நான்காம் வாலியத்தையும் சேர்த்துப் பார்க்கும்படி கோருகிறேன்.

அன்றியில் இதனைச் சேர்ந்த யோக ஞான சாஸ்திரத்திரட்டு பத்துபாகம் வரை அச்சிட்டு புஸ்தகமாகத் தயாரிலிருக்கிறது. வேண்டியவர்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கெழுதி வி. பி. மூலமாகவும் நேரிலும் புத்தகம் ஒன்றுக்கு ரூபாய் ஒன்று வீதம் பெற்றுக்கொள்ளலாம்

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப், புதுமண்டபம், மதுரை.





உ

சிவமயம்.

முதலாவது

குடைப்பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய

# ஞான சைதன்யம் 7.

வெளிகடந்த வெளியொளியே சுழினைகாப்பு
    வேதாந்த வியாத்தி னறிவேகாப்பு
தளிர்தனனுங் கானுமொன்றாய் மூன்றுமவ்வில்
    தம்பனத்தில் மோகனத்தாய் பதமேகாப்பு
அளிகருவி லெட்டாகி நாலுஞ்சேர்ந்த
    அதிசயமே பூரணத்தி னறிவேகாப்பு
களிவுறுதி சைதன்ய ஞானங்கூறக்
    கணபதியே முத்தியருள் காப்பதாமே.

தானென்ற உப்போடு கமரசாரம்
    தனித்துநின்ற திரிப்பொடியாம் மண்டலமூன்றாய்
வானென்ற பூதமஞ்சாய் ஆதாரமாறாய்
    மருவியது பஞ்சீகிருதமாகி
வேனென்ற தத்துவமாய் மனசுநாலாய்
    வேதாந்தஞ் சித்தாந்தம் மனமுமாகிக்
கோவென்ற சூட்சத்தில் நின்றதப்பா
    கொள்கியதி லோர்ஞானங் கூறக்கேளே. (1)

கூறுகிறோம் தத்துவத்தைக் கேட்டுத் தள்ளிக்
    கொண்டுநின்ற ஆறுதலைக் குறியுந்தள்ளிக
கூறுகிறோம் மாயையெல்லாம் குறியோடேதள்ளிக்
    கூறுகின்ற வாசனையைக் குமட்டிநீக்கிக்
கூறுகிறோம் மனதோடே புருவமையத்துநீ
    கொடுமனசை அசையாமற் கெட்டிபண்ணிக்
கூறுகிறோம் அகாரமுத லுகாரத்தாக்கிக்
    குவிந்துநின்ற மவுனத்தை அறிவிற்றாக்கே. (2)

தாக்கையிலே புருவமையம் கனத்துவிம்மும்
சாதகத்துக் கேறுவது தாக்குதாக்கு
நோக்கையிலே பனிச்சென்று நாதங்காணும்
நுன்னையஞ்சேர் நாதம்போம் அறிவுஞ்சேரும்
பார்க்கையிலே ஒன்றுமில்லை சடமுமில்லை
பாரென்ற மவுனமில்லை அறிவுமில்லை
காக்கையிலே அகண்டமுள்ளே கொல்லுங்கொல்லும்
காராட்டா லொன்றுமில்லை காருபாரே.

பாரிந்த அகண்டத்துக் காதியந்தம்
பரவியதிற் கட்டுகிற துறையோகோடி
நேரிந்தப் படியல்லோ சேர்ந்தார்கேளே
நிமிஷத்தில் தெருவிக்குஞ் சுகமொன்றுபோதம்
சாரிந்தச் சமரசை அருளோடுபொருளுஞ்
சாதகமாய்ச் சொன்னதெல்லாம் பொய்யாம்பொய்யே
கூரிந்தக் குருவருளாற் குகையிற்சென்று
குவியாட்டாற் குருவகைக்குங் குளிகைசெய்யே.

செய்யப்பா குளிகைமுத்தி ஆரியத்திற்சொக்கும்
செகசால மட்டாங்கஞ் சேராடும்
வையப்பா மனசையந்த அகண்டத்துள்ளே
மற்றொன்றில் வையாதே மயக்கமாகும்
மெய்யப்பா முக்காலுஞ் சொன்னேம்பாரு
வேறொன்று மெண்ணாதே மனமுரைக்கமுத்தி
பொய்யாவெண் ணாதேவுப சரிக்கச்சித்தி
புகழ்பெரி யோர்கள் போக்கிதாமே.

போக்கோடே தேசமெங்குந் திரியுமக்காள்
புகழாக விந்நூலைப் பாடம்பண்ணி
வாக்கோடே நாதாக்கள் நாதங்கேட்டால்
மயங்காதே யிம்முறையை வகையாய்ச்சொல்லு
தாக்கோடே ஆறுமந்தத் தாரியமீது
தானவனுஞ் சச்சிதா னந்தகுருமூலம்
தூக்கோடே பணிந்துமக்காள் வாயைப்போற்றிச்
சோதியமாய்ப் பிதாபெயரைச் சொல்வேன்பாரே.

சொல்லுகிறேன் மூலகுரு காலாம்பேரன்
சொற்றவருக் கொங்கணற்குப் பிள்ளையானேன்
சொல்லுகிறேன் உனையழைத்து அணைத்துக்கொள்வார்
குமூலகி லறுபத்து நாலுபதியோரும்
சொல்லுகிறே னதிலறிந்த மட்டுஞ்சொன்னேன்
ஆடியான நாதாக்கள் தாளும்பெற்றேன்
சொல்லுகிறேன் மூலகுரு போகர்பாதம்போற்றிச்
சுத்தசை தன்னியமென்றும் வேதாந்தமுற்றே. (7)

கடைப்பிள்ளை ஞானசைதன்யம் 7
முற்றிற்று.

---



மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் த. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இ ர ண் டா வ து

கடைப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய

# ஞான சமாதி தீட்சை 17

ஆதிசிவ மூலகணபதியைப்போற்றி
அருள்பெருகுஞ் சமாதியுட தீட்சைசொல்ல
நீதியுள்ள நந்தீசர் மூலநாயன்
நிலையறிந்த காலாங்கி போகமூர்த்தி
சோதியெனும் பூரணத்தே சிகராய்நின்ற
துலையான கொங்கணவர் பாதங்காப்பு
ஓதியதோர் மந்திரகலை சமாதிதீட்சைக்
குண்மையுள்ள கணபதிதாள் சரணந்தானே. (1)

தானான தீட்சையடா சமாதிதீட்சை
தனையறிந்த மந்திரமாம் மூலபீடம்
கோனான பீடமதை யார்தான்காண்பர்
குறித்தபடி சொல்லுகிறேன் குறியைக்கேளு
தேனான மூலமடா அக்கினியுமாச்சு
திருவான முக்கோண மாலின்வீடு
வானான அண்டமடா புருவமத்தி
வளமான மதியினுட மனத்தான்பாரே. (2)

பாரப்பா மூன்றினுட விபரஞ்சொன்னேன்
பதிவாக அவர்களுட மூலங்கேளு
நேரப்பா அடிமூல மக்கினியின்பீசம்
நிலையான பீசமடா ஓம்அம்உம்மென்றோது
சாரப்பா நடுவான கதிரினுடபீசம்
கருணைவளர் ஐங்கிலியும் சவ்வென்றோது
மேரப்பா முடிவான மதியின்பீசம்
விளங்கிநின்ற நமசிவய மென்றுகாணே. (3)

காணவே மண்டலங்கள் மூன்றில்நின்ற
　　கருணைவளர் தேவதைகள் பீசஞ்சொன்னேன்
பூணவே மனங்குவிந்து செவிக்கமைந்தா
　　புத்தியுடன் வகைவிபரம் புகலக்கேளு
தோணவே உதயாதி தன்னில்நீயும்
　　சுத்தமுள்ள மனக்கண்ணால் மூலம்பார்த்து
ஊணவே ஓம்அம்உம் மென்றேதான்
　　உத்தமனே நூத்தெட்டு உருவேசெய்யே. (4)

உருவறிந்து ஓதயிலே மூலத்தீய்தான்
　　ஓமெனவே தான்சொலித்து வேர்வைமீறும்
கருவறிந்து தானெழுந்து நித்தியகர்மம்
　　கட்டளையைத் தான்முடித்து தன்னைநோக்கித்
திருவிருந்த சத்தியடா முக்கோணத்திற்
　　சென்றிருந்த மனக்கண்ணால் நன்றாய்ப்பார்த்துக்
குருவிருந்த பதிநோக்கித் தியானம்பண்ணிக்
　　குணமாக அய்யுங்கிலியுஞ் சவ்வென்றோதே (5)

ஓதுவது நூத்தெட்டு உருவேசெய்தால்
　　உத்தமனே பரிதிமதி யொன்றாய்க்கூடி
மாதுவளர் பூரணமாம் அண்டத்தேகி
　　மகத்தான சுழினையிலே தீபங்காணும்
கோதுபழு தில்லாதத் தீபங்கண்டாற்
　　கூர்மையுள்ள கண்கள்ரெண்டுஞ் சிவப்புமாகும்
ஆதரவாய் அந்தநிலை யறிந்தேகொண்டு
　　அப்பனே மதிவீட்டை அடுத்துக்காரே. (6)

அடுத்துமனை அருதியினால் புருவத்தேகி
　　அப்பனே பிருகுடியின் அந்தத்தாலே
தொடுத்துமிகச் சிவயநம வென்றுதானுஞ்
　　சுத்தமுடன் நூத்தெட்டு உருவேசெய்து
கடுத்தரமாய் நின்றநடு விண்ணைநோக்கி
　　நாட்டமுடன் சந்திரனே பிரகாசிக்கும்
திடத்துடைய சந்திரனே பிரகாசித்தாற்
　　தேகமதிற் குளிர்ச்சியுமே செம்மையாமே. (7)

# யோக ஞான சாஸ்திரத் திரட்டு

ஆமப்பா கயிலாச வர்க்கத்தோர்கள்
அப்பனே புருவமதின் னருளைக்காண்பார்
தாமப்பா சொல்லுகிறேன் மூலவர்க்கத்
சங்கையுடன் நடுவான தெளிவைப்பார்பார்
ஊமைப்பா யிருவருக்கும் ஒன்றேசூட்சம்
உருதியுள்ள சூட்சமடா மூலாமூலம்
காமப்பால் சாலைப்பால் கொண்டுசெல்ல
கருவான மூலத்தைக் காருகாரே.

காரப்பா மூலமது கணபதியின் தியானம்
கருவான முக்கோணம் சத்தியுட தியானம்
ஓரப்பா புருவமது சதாசிவத் தின்தியானம்
உண்மையுடன் நித்தியமுந் தியானித்தக்கால்
தேரப்பா மனந்தேறும் வாசிதேறும்
சிவசிவா வெகுணசித்துத் தானேயுண்டாம்
நேரப்பா தினந்தோறுந் தியானஞ்செய்ய
நீடுலகில் நீயுமொரு சித்தன்காணே.

காணவே மூலத்தால் முத்திபெற்றார்
கருணையுள்ள ரிஷிமூவர் சித்தரெல்லாந்
தோணவே மூலத்தால் சித்துமுண்டாம்
துலங்குகின்ற அடிமூலம் ஆர்தான்காண்பார்
பூணவே அடிமூலம் தன்னொளியாய்நிற்கும்
புருவநடுச் சுழினையடா விண்ணொளியாய்நிற்கும்
பேணவே விண்ணொளியை விண்ணிற்சேர்த்து
பெருகின்ற ததினிலே சமாதம்பாரே.

பாரப்பா சமாதியுட பருவஞ்சேரு
பதிவான மூலமது தியுமாச்சு
கோரப்பா நடுமனைதான் வாய்வுமாச்சு
கோர்த்துரெண்டும் வொன்றென்றாய்க் காயமாச்சு
சாரப்பா ரெண்டையுமே ஒன்றுபண்ணித்
தானவனாய் நின்றதினால் சமாதியாச்சு
ஆரப்பா அறிவார்கள் சமாதிநிட்டை
ஆதியந்தம் நீயெனவே அறிவாய்காணே.

காணவே சொல்லுகிறேன் மதிக்கும்மேலே
கலந்துபார் அறிவுடனே இசநாதத்தைப்
பூணவே யிருதயராய் நெஞ்சிற்றானும்
புகழான ரவியினுட பிரகாசத்தைத்
தோணவே ஆதார மூலம்பாரு
சுடர்க்கொடி போலவுமே தீபங்காணும்
ஊணவே நல்மனதாய் மூன்றும்பார்த்து
உத்தமனே உகந்தந்த விடத்தைக்கேளே.

சேளுநீ ஆதியடா மூலாதாரங்
இருமையுள்ள சுதாதாரமாம் திராதாரந்தான்
வாழுநீ பிர்மமது மைந்தா கேளு
வலுமையுள்ள மவுனமடா துரியாதீதம்
வேழுநீ மாலினுட வீடதானும்
விளங்கின்ற கருணையடா துரியம்பாரு
சூழுநீ ருத்திரனார் மலையிற்றானும்
சுழியதுவும் நின்றதடா அறிந்துகொள்ளே.

அறிந்துகொள்ளு மயேஸ்பரத்தில் மைந்தாமைந்தா
அப்பனே சொற்பனந்தா னடங்கிநிற்கும்
விரிந்துநின்ற மணித்தாயின் வீட்டுக்குள்ளே
விளங்கிடுமே சக்கரந்தான் மேன்மையாக
வரிந்துநன்று மாதாரம் நன்றாய்ப்பார்த்து
வழிதுறையும் வாசியுட நிலையுங்கண்டு
திருத்தியதோர் துரியாதீ தத்தில்நின்று
சிவாயகுரு தேசிகனார் பாதம்பற்றே.

பத்திமனம் பற்றுவது மூலத்தியிற்
பாங்கான சுழியமுனை லச்சுழிவிற்சென்று
சுத்தமுள்ள சதாசிவனார் மனையிலேதான்
சுடரொளியாந் தூண்டாத தீபமாகும்
சித்தமுள்ள தீபமடா பிராணனாதம்
சென்றெழுக்க விடத்திலது சேருங்கண்டாய்
புத்தியுடன் அந்திடத்தில் மனதைவைத்துப்
பூரணமாய்க் கேசரியைப் பூசைபண்ணே.

பூசையென்ன தேசமுறு கோயிலாச்சுப்
புத்தியுடன் கோவிலுக்குட் செல்லும்போது
நேசமுடன் மூலகண பதியைப்போற்றி
நிலையான நந்தியடி பூசைபண்ணி
வாசமுடன் சதாசிவனார் மனையிற்புக்கி
மகத்தான பராபரனார் ஒளியைக்கண்டு
பாசமுடன் நேசமதாய்த் தியானஞ்செய்யப்
பதிமான சமாதிமுத்தி தீட்சையாமே. (16)

முத்தியுள்ள சமாதியுட தீட்சைதன்னை
மூதண்ட யோகசிவ ஞானிக்கீவாய்
சித்தமுள்ள சிவயோக முத்தர்க்கீவாய்
சிவஞ்ஞான குருதேசி தனக்குமீவாய்
சுத்தமுள்ள சமாதியுட தீட்சைமார்க்கம்
சோசியமாய்ச் சொன்னதை நீ பதனம்பண்ணி
சத்தமது தான்பிறந்த யிடத்தில்நின்று
சதாகாலம் பூரணத்திற் சார்வாய்முற்றே. (17)

கடைப்பிள்ளை ஞான சமாதி தீட்சை 17

முற்றிற்று.



மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் க. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

முருகன் துணை.

மூன்றுவது

கடைப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய

# ஞானத்தண்டகம் 50

அண்டமெனும் எமகூட மலையில்வாழும்
        ஆதிநந்தி காலாங்கி மூலர்போகர்
விண்டபடி நடனமிடுஞ் சிலம்பைக்கண்ட
        வேதாந்தக் கொங்கணவர் பாதம்போற்றி
கண்டதொழி லடங்கமதாற் றண்டகத்திற்
        கருவுருவாய்ப் பாடுதற்கு கமலங்காப்பு
மண்டலத்துக் காதார மானநந்தி
        மகத்தான மூலகண பதிகாப்பாமே.

பதியான பதியதுவும் மூக்கோணந்தான்
        பார்மகனே உந்தியென்ற கமலமீதிற்
கெதியான மோட்சகெதி வீடென்றெண்ணிக்
        கிருபையுள்ள ரவிமதியை ஒன்றாய்க்கூட்டி
விதியான எழுத்தெனவே மவுனமாக
        வேதாந்த சாரதொடுத்து விண்ணைநோக்கித்
துதியான காலமென வுருவேசெய்து
        தாயான கொங்கணர்க்கு மகன்தானென்னே. (1)

மகனான கடைப்பிள்ளை யானசித்தா
        மார்க்கமுடன் வாவெனவே அமிர்தமீய்ந்து
அகமான தேகமதிற் சூட்சங்காட்டி
        அஞ்செழுத்துக் குயிரான ஆதிகாட்டி
சுகமான பதிகாட்டிச் சொரூபங்காட்டிச்
        கோதியென்ற கற்பூர நிலையுங்காட்டிச்
செகமாயை தன்னுடைய வழியுஞ்சொல்லிச்
        செம்மையுடன் சிவயோகந் திறஞ்சொன்னேனே. (2)

சொன்னமொழி மெய்யெனவே தன்னைப்பார்த்துச்
சொரூபமிலை தனையறிந்து விண்ணைநோக்கிக்
கன்னுமனக் கண்ணறிந்து தன்னைப்பார்த்துக்
காலறிந்து மேலான கமலவீட்டில்
உன்னிவிலே பாடிமனக் கண்ணினாலே
உரிமையுடன் மதியுறுர்த வுண்மைபெற்றுத்
தன்னருளை தானுகத் தன்னைப்போற்றித்
தவசியென்ற கலைநெறி விண்ணைப்பற்றே. (3)

பத்தியுள்ள குருபரனைக் கண்டால்மைந்தா
பருதிமதி சுடாதின்பின் பதியைக்கேளு
முத்தியுள்ள ஆதார முடிவைக்கேளு
மூர்க்கமுள்ள வாசியுட கருவைக்கேளு
சித்தியுள்ள கற்பமதின் செயலைக்கேளு
சிவசிவா பஞ்சகலை தீக்ஷைகேளு
சுத்தமுடன் மனப்பிறாத்தக் கருதிகேளு
சொரூபமிலை யென்னவென்று தொழுதுகேளே. (4)

கேளடா பிர்மநிஷ்டை தன்னைக்கேளு
இருமையுடன் நிருவிகற்ப சமாதிகேளு
வாளடா சிவயோக வாழ்க்கைகேளு
மந்திரத்துக் குயிரான மணியைக்கேளு
காலடா ஓடிநின்ற யிடத்தைக்கேளு
கண்மூடி அறிவழிந்த கதையைக்கேளு
மாளடா மாண்டவிடந் தன்னைக்கேளு
மதிகதிரும் நின்றகுறி மார்க்கங்கேளே. (5)

மார்க்கமுடன் மூலமுத லாறுதாரம்
வகையுடனே அறிந்துகந்து சுழியில்நின்றால்
ஏர்க்கையுடன் நினைத்தவண்ணம் முடிக்கலாகும்
எட்டிரண்டும் ஒன்றான இன்பத்தாலே
பார்க்கமணிக் கண்ணாலே நன்றாய்ப்பார்த்து
பக்திகொண்டு தேகமதைச் சித்திபண்ணு
[illegible]ர்க்கையுள்ள தேகமட்டு [illegible]
[illegible] (6)

சித்தியுள்ள வகையேது என்றால்மைந்தா
நேர்க்கமுடன் சொல்லுகிறேன் மார்க்கமாக
முத்திகொண்ட ஆகாரமடா விந்துவிந்து
முதலான விந்துவடா தண்ணீரப்பா
புத்திகொண்டு தண்ணீரை யொன்றில்வாங்கிப்
புகலவே வாய்விளகுப் பொடியைத் தூவிப்
பத்தியுட னுறையூறி தன்னிற்கொண்டாற்
பாலகனே தேகமது வாலையாமே. (7)

ஆமப்பா வாலையை தாகுந்தேகம்
அந்தரங்க மானதொரு அமிர்தந்தானும்
தாமப்பா தன்பிலையை யறிந்துகொண்டு
சதாகாலம் பூரணத்தில் மனத்தைநாடு
காமப்பால் காளல்பால் ரெண்டுங்கொண்டால்
கயிலாச தேகமடா காலனோடு
ஓமப்பா சத்தியமாய்ச் சொன்னவார்த்தை
உறுதிவைத்துச் சத்தியமா யுற்றுப்பாரே. (8)

உத்தமொழி சத்தியமாய்ச் சொல்லக்கேளு
உறுதியுடன் மனதுருதி யாகநின்று
பத்தியுடன் ஓம்கம வசியவென்றே
பார்மகனே உருவேற்றப் பலிக்குஞ்சித்தி
சத்தமுடன் தேகம்வச்ர காயமாகும்
சருதிபனல் மூலமடா முக்கோணத்தில்
புத்தியுடன் சதாகால முருவேசெய்தாற்
பூரணத்தில் நின்றுகெதி காணலாமே. (9)

காணவே வாமப்பால் தண்ணீராகும்
கருவையுள்ள கனற்பாலே நாதம்நாதம்
பேணவே நாதமென்றால் அறிவாரில்லை
பெண்குழந்தை அழுரியடா குமரிகற்பம்
தோணவே அந்தநீ ரொன்றில்வாங்கிச்
சுகமாக வால்பிளகு ஊறப்போட்டுப்
பூணவே வூறியபின் னெடுத்துக்கொண்டு
புத்தியுடன் பின்னுமந்த நீரிற்போடே. (10)

போடப்பா பத்துமுறை நன்றாய்நீயும்
புண்ணியனே தானெடுத்து வைத்துக்கொண்டு
நாடப்பா வுதையெடுத்துப் பதனம்பண்ணி
நடுவான பூரணத்தைத் தியானஞ்செய்து
வீடப்பா பெலப்பதற்கு மைந்தாநீயும்
விபரமுட னந்திசந்தி யுச்சிமூன்றாய்த்
தேடப்பா அய்யஞ்சாய்க் கொண்டுதீர்ந்தால்
தேகத்தில் நின்றதொரு நோய்கள்போமே. (11)

நோயான தின்னமொன்று அமிர்தகற்பம்
நுண்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தாயான ஆனந்த மூலிச்சாத்தில்
தூயவான சாதிக்காய் ஊறப்போட்டு
வாயாறக் காயினிலோ ரெட்டுப்பங்கு
வரிசையுட னேநறுக்கித் தானும்வைத்த
காயான சாதிக்கா பூரித்தானாற்
கணக்கஞ்ச முறைசெய்து வுலர்த்திக்கொள்ளே. (12)

கொல்லப்பா உதையாதி தன்னிலேதான்
குணமாக வொருதுண்டு வாயிற்போட்டு
மெல்லப்பா மென்றுரசங் கொண்டாயானால்
வேதாந்த வாசியது சித்தியாகும்
செல்லப்பா வாசியிற்சென் றேறியந்தத்
திருவான நடுமனையாஞ் சிகாரவீட்டில்
நில்லப்பா நின்றநிலை கொண்டால்மைந்தா
நிலமான மூலமது நிலைக்கும்பாரே. (13)

நிலையான சிவகலை வலுவாய்நிற்கும்
நிசபூசை விதிதீட்சை விதியாந்தன்னை
கலையாத மனதாகப் பூசைசெய்தாற்
கருவான தேகமது முத்தியாகும்
சிலையான தேகமது முத்தியானாற்
சிவசிவா சிவயோக மிதுதான்பாரு
அலையாதே வெறும்வீணர் பேச்சைநம்பி
ஆசைகொண்டு திரியாதே அண்டத்தேறே. (14)

அண்டபகி ரண்டமெல்லாம் நொடியிற் கடந்து
அவையடக்க மாகவொரு குளிகைசொல்வேன்
கண்டபடி சொல்லுகிறேன் மைந்தாகேளு
காயாமா சாதிலிங்கம் விராகங் கட்டு
கொண்டபடி இரசம்பதாறும் விராகனந்தா
குணமான ஏலமது விராகனந்தா
விண்டபடி மதுரமது மூன்றுங்கூட்டி
விரைவாகக் கல்வத்திற் பொடித்துக்கேளே. (15)

கேளப்பா ஆனந்த மூலிச்சாற்றிற்
கிருபையுடன் நன்றாக அரைத்துமைந்தா
கேளப்பா ரவிதனிலே உலர்த்திப்பின்னால்
கெணிதமுடன் பின்னுமந்தச் சாறுவிட்டு
கேளப்பா இப்படியே பத்துமுறைசெய்து
கிருபையுடன் கல்வத்தில் நன்றாயாட்டி
கேளப்பா ஆட்டியபின் வழித்தெடுத்து
கேள்வியென்ன பின்னுமதை நன்றாயாட்டே. (16)

ஆட்டப்பா மைப்போல வழித்தெடுத்து
அப்பனே மிளகதுபோ லுருட்டிமைந்தா
நீட்டப்பா ரவிதனிலே காயப்போட்டு
நிமலமான தங்கமதாற் சிமிழ்தான்செய்து
போட்டப்பா பத்திரமாய் வைத்துக்கொண்டு
பூரணமா யொருகுளிகை வாயிற்போட்டு
நாட்டப்பா வாசிதனைச் சுழினைக்கேற்றி
நாதாந்த அமிர்தமது கொண்டுதேறே. (17)

தேறுவது யேதெனவே மைந்தாகேளு
சிவசிவா பிராணயஞ் செய்துகொண்டு
ஏறுவது வாசியினால் மூலங்கண்டு
ஏகாந்தச் சற்குருவைத் தியானம்பண்ணி
மாறுவித மறிந்தவொரு வேளினக்கால்
மகத்தான பிராணயஞ் சித்தியாகும்
பூருவமாய் நின்றதொரு ஆருகாரம்
பொருந்திநின்ற சிவகலை யமுதமாமே. (18)

ஆமுத்ரசஞ் சாரமுடன் குளிகைகொண்டு
அந்தரங்க மாகவேநீ கொண்டால்மைந்தா
அமுதரசத் தேகமதா யிருக்கும்பாரு
ஆதியந்த நாதவிந்தைச் சொல்லக்கேளு
அமுதரச மானதுவுங் குயப்பாலாகும்
அப்பனே நாதமது தேனுமாமே
அமுதரச குயப்பாலுந் தேனுங்கூட்டி
அப்பனே யுண்டொன்றா யிருபோதுண்ணே. (19)

உண்ணையிலே கபமகலும் வாசியேறும்
உறக்கமென்ற அசதியது ஓடிப்போகும்
கண்ணுமனக் கண்ணதுவு மொன்றாய்ச்சேர்ந்துக்
கலையான வாசியது கண்டுதேற
விண்ணான சுழினையிலே நடனங்கொண்டு
மெய்யான கற்பூர வீட்டிற்சென்று
ஒண்ணான சுடரதுதான் வாசியோடே
ஓடுங்கிநின்ற விடமதுதான் சுழியுமாமே. (20)

சுழியறிய வகையோடே சொல்லக்கேளு
சுகாசனமா யிருந்துமன தறிவால்மைந்தா
வழியோடே போம்வாய்வு சிவமதாகும்
வார்க்கமுட னுட்புகுதல் சத்தியாகும்
வெளியாமற் கண்டமதில் அங்கென்றாணி
நேசமுடன் சத்திசிவ மொன்றாய்நின்று
அழியாத பேரின்ப வீட்டிற்செல்லும்
அவ்விடந்தான் சிகாரமடா சுழியாம்பாரே. (21)

பாரப்பா ரவிவீடு மூலாதாரம்
பதிவான மதிவீடு புருவமத்தி
நேரப்பா சுடரதுதான் சிகாரத்தந்தப்
நிசமான முச்சுடரு மிதுதான்பாரு
பேரப்பா முச்சுடரே மும்மலமுமாகும்
பேரண்ட மிதுவாகுங் கண்டுகொள்ளு
காரப்பா விதையறிந்து நடுவில்நின்றால்
கருவான சிலம்பொலிதான் நாதமாமே. (22)

நாதமென்ற நாதமடா அண்டத்தங்கம்
 நடுவான சூட்சமடா விந்துப்பிள்ளை
சூதமென்ற விந்தோடே நாதஞ்சேர்க்கச்
 சொல்லுகிறேன் கருமானஞ் சுருக்கினன்றாய்
நீதமென்ற அமுதமதில் விந்துசேர்த்து
 நிசமான விந்துரெட்டி ஒன்றாய்க்கூட்டிப்
போதமுடன் வெந்தெடுக்க வாலையிச்சா
 புத்தியுட னவ்வாலை சுத்தியன்னோ. (23)

சுத்திசெய்து வாலைதனை வைத்துக்கொண்டு
 சுருதியுள்ள நாதமதைச் சரியாய்ச்சேர்த்துப்
பத்தியுடன் சுற்பத்தில் மத்தித்தாக்கால்
 பாலகனே நாதவிந்து ஒன்றாய்க்கூடி
சித்தியுள்ள மெழுகதுபோ லிருக்குமைந்தா
 சிறுமணியாய்ப் பதினறு மணியைச்செய்து
முத்திபெற்ற தமர்ச்செய்து பழுத்தினுள்ளே
 மூடிவைக்க மணியதுவு மிறுகிப்போமே. (24)

இறுகின்ற மணியெடுத்துக் கமலப்பாலில்
 இன்பமுடன் சுத்திசெய்து யெடுத்துமைந்தா
உறுதியுடன் கோர்வைசெய்து வைத்துக்கொண்டு
 உத்தமனே மூகமணிதான் தங்கந்தங்கம்
பருதியென்ற தங்கமணி முகப்பில்வைத்துப்
 பக்குவமாய்ச் சற்குருவைத் தியானம்பண்ணிச்
சுருதியுடன் மந்திரங்கள் செபித்தாயானாற்
 சொல்லவொண்ணு அச்சரங்கள் சித்தியாமே. (25)

ஆமப்பா மனோமணியைத் தியானம்பண்ணி
 அருள்பெருகுஞ் செபமாலை கையில்வாங்கித்
தாமப்பா தன்னிலையே புருவமத்தி
 தாயான இருதயமா முக்கோணத்தில்
வாமப்பால் மகிமையினால் வாசிபூட்டி
 வகையுடனே கண்டமதில் அங்கென்றாணி
ஓமப்பா உள்மூலச் சுழியில்நின்றால்
 உதயமனே சத்திசிவ முறுதியாமே. (26)

உறுதியுடன் பிராணாயக் கருவைக்கேளு
ஓம்சிவா வசியமதை யென்றுசொல்லுற்
அருதியுடன் மாத்திரையொன் றச்சமைந்த
சுகமாக ரேசிப்பாய் பதினாறையா
பருதியுடன் பூரிப்பாய் முப்பான்ரெண்டு
பார்மகனே கும்பிப்பாய் இருபான்னாலு
வரிதியுடன் மாத்திரைதா னறிந்தானால்
மனக்கண்ணால் வெளியொளியை மருவிகேளே. (27)

நோப்பதி யின்னமொரு கருவைக்கேளு
நேர்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாமைந்தா
தேரப்பா போம்வாயு ரேசகந்தானாகும்
திரும்பியது உட்புகுதல் பூரகந்தான்மைந்தா
சேரப்பா ரெண்டையுமே யொன்றாய்ப்பண்ணித்
திருவாய் சுழினையென்ற சிகாரவீட்டிற்
காரப்பா மனக்கண்ணால் நிறுத்திப்பார்த்தாற்
கருணையுள்ள கும்பகமென றறிந்துகொள்ளே. (28)

கொள்ளப்பா வசியமொன்று சொல்லக்கேளு
கூர்மையுள்ள புழுகதிலே சவாதுகூட்டி
விள்ளப்பா ரெண்டையுமே யொன்றாய்ச்சேர்த்து
மெய்ஞ்ஞான வசியமென்று மந்திரித்தேதான்
தெள்ளப்பா தங்கமென்ற சிமிழில்வைத்துச்
சிவசிவா நெற்றிதனிற் றிலதம்போட்டு
உள்ளப்பா அஞ்செழுத்தைத் தியானம்பண்ணி
ஓமெனவே நீயிருக்க வுண்மைகேளே. (29)

உண்மையின்று சொல்லுகிறேன் மைந்தாகேளு
உனதுடைய சமூகமதைக் கண்டோர்க்கெல்லாம்
வண்மையென்ற நோய்களெல்லா மகன்றுபோகும்
வஞ்சனையும் பில்லி முதல் யாவும்போகும்
இன்மையென்ற மனதகன்று நன்மையாவார்
சிவசிவா திலதமதின் செயல்தானையா
நன்மையுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
நாதாந்தப் பூரணத்தில் நாடிநில்லே. (30)

காணவே யின்னமொரு கருவைக்கேளு
　　காயான சாதிக்காய் தன்னைமைந்தா
தோணவே குயப்பாலா லுரைத்துக்கொண்டு
　　சுகமாக மூன்றுநாள் பெண்ணுக்கீய்வாய்
பூணவே பெண்களுட கெற்பந்தன்னிற்
　　பொல்லாத நோயகன்று பிள்ளையுண்டாம்
பேணவே புத்திகொண்டு பாருமைந்தா
　　பெருமையுடன் பிள்ளையுமே பிறக்குந்தானே. (35)

தானவனும் நின்றுதவஞ் செய்யவேணும்
　　தன்மையுடன் பூரணத்தைக் காணவேணும்
கோனவனால் நின்றகுறி மூலாதாரம்
　　குருவான ஆதாரம் சிகாரமாச்சு
ஞானவனாய் நின்றுநிலை தன்னைக்கண்டால்
　　நடுவான பூரணமே யேகவஸ்து
வானவர்கோ னறியாத வஸ்துதன்னை
　　வணக்கமுடன் மனக்கண்ணால் மகிழ்ந்துபாரே. (36)

பாரப்பா தீட்சைவிதி தன்னைப்பாரு
　　பத்திகொண்டு பூசைவிதி பதிவாய்ப்பாரு
நேரப்பா நின்றநிலை தன்னைப்பாரு
　　நிசமான சக்கரத்தின் நேர்மைபாரு
பேரப்பா வட்சரத்தின் மகிமைபாரு
　　பேரொளியின் நாதகி தத்தைப்பாரு
தேரப்பா கர்மத்தின் செயலைப்பாரு
　　தெளிவான வாசியினாற் கண்டுதேறே. (37)

தேறுவது வாசியினாற் றேறவேணும்
　　சிவசிவா சிவயோகத் திருக்கவேணும்
நேருவது சுழிமுனையை நேரவேணும்
　　நிசம்வைத்துப் பூரணத்தில் நிலைக்கவேணும்
சாருவது புருவநடுக் கமலமீதிற்
　　சதாசிவனும் மனோன்மணியுந் தானேதானாய்ச்
சேருவது சுழினையென்று சிகாரவீட்டிற்
　　றேனருவி பாயுதடா தினமுங்கொள்ளே. (38)

கொள்ளுதற்கு இன்னமொரு கருமானங்கேள்
கூர்மையுள்ள தாதுபுஷ்டி யாகத்தானும்
நன்ளுறவா யுண்டாகக் குணத்தைக்கேளு
நலமான ஆவினுட பாலிலேதான்
துள்ளுகிற நெரிஞ்சிப்பூ முருங்கைப்பூவுந்
துப்பறவாய்ப் பாலிலிட்டுக் காய்ச்சிமைந்தா
தெள்ளுதற்குக் கற்கண்டு பொடித்துப்போட்டுச்
சிவசிவா வுதயத்திற் புசித்திடாயே. (39)

புசித்திடுவா யீராறு தினமுமைந்தா
பூரணமாக் தாதுவது புஷ்டியாகும்
வசித்ததொரு தேகமது சித்தியாகும்
மன்மதனும் நிகரில்லா வழுவுண்டாகும்
நசித்ததொரு நீர்க்கடுப்பு வெட்டைநீரும்
நடுவான விந்துவுஞ் செபிக்கும்பாரு
விசுத்தியின்மே லாக்கினையாம் புருவமீநில்
வேதாந்தக் கற்பூரத் தீபம்பாரே. (40)

பாரப்பா மூலமதின் கனலைத்தாண்டிப்
பதிவான முக்கோணச் சிகாரவீட்டில்
நேரப்பா மனதறிவால் நின்றுபாரு
நின்றிலங்கும் கற்பூரத் தீபந்தானும்
சாரப்பா அத்தீபந் தன்னிலேதான்
சார்வாக வாசியைநீ கூட்டிப்பாரு
ஆரப்பா அறிவார்க ளாதிதீபம்
அறிவான வாசியினால் மூலம்பாரே. (41)

மூலமென்ற மூலமதை யார்தான்காண்பார்
மூச்சுடராய் நின்றதொரு மூலந்தன்னில்
மூலமென்ற நடுமூலம் முக்கோணந்தன்னில்
மூளைத்தெழுந்த சிகாரமடா ரீங்காரந்தான்
மூலமென்ற ரீங்காரம் நடுவேவிந்து
மூன்றான ரவியோடே மதியைச்சேர்த்து
மூலமென்ற கண்ணாடிக் குள்ளேபாரு
மூத்திகொண்ட தீபமடா பிராணனாமே. (42)

# போக ஞான சாஸ்திரத் திரட்டு.

ஆமப்பா பிராணனென்ற மூலத்தியால்
ஆதார சுழினையென்ற நியத்தேத்தி
ஓமப்பா வென்றதொரு தியானந்தானே
ஒடுங்கிநின்ற மனதறிவாற் வெளிப்பாரு
நாமப்பா தன்னருளாற் சொரூபசித்
தயங்கியே நின்றதொரு நிபமாகிப்
போமப்பா அந்தியந் தட்தான்சென்று
பூரணமாய் நின்றிலங்கும் பிராணனுக்கே.

ஆச்சப்பா பிராணனிலே புருவமத்தி
அப்பனே நிமசயமுமே யாருமாகும்
மூச்சப்பா நின்றிலங்கும் மூலையாத்திபம்
முத்திரிகோணம் பீடமதுதான் சத்தியாகும்
பேச்சப்பா பிந்துவதாற் றெறிக்கும்ரெண்டும்
பெருமையொடு இகாரமடி மூலமாகும்
நீச்சப்பா வெகுநீச்ச நிருவிகற்பம்
நிலையான சமாதிதான் நிஷ்டையாமே.

ஆமப்பா மனதுறுதி டகுலபிக்கை
அறிவான பூரணமாம் வித்துவித்து
ஓமப்பா வித்தென்ற அமுதத்தன்னை
உத்தமனே வெண்சாரை யென்றேபேர்தான்
காமப்பா வெண்சாரை தண்ணீராகுங்
கருணையுள்ள தண்ணீரும் வெண்ணீராகும்
நாமப்பா வெண்சாரை ஆதிகற்பம்
நன்மைதந்திடுஞ் சண்டுகொண்டு தானுப்பிலே.

நீலென்ற கருஞ்சாரை சொல்லக்கேளு
நிசமான பெண்ணமுரி நீரைவாய்ப்பாரு
செல்லென்ற சாரையடா அமுதகற்பஞ்
சித்தையமா தொன்றாக் கொண்டுதேர்ந்தாற்
சொல்லென்ற மந்திரங்க ளெல்லாஞ்சித்தி
சுருதியென்ற தேகமது முத்தியாச்சு
கல்லென்ற கன்னருக்கு இத்தனாலே
சாட்டாதே மனதறிவால் தன்னைப்பாரே.

சார்ந்திடுவாய் நித்தியதத் துவமதாகத்
தனியான பரவெளியின் நடனங்கண்டு
தேர்ந்திடுவாய் மெய்ஞ்ஞான போதந்தன்னிற்
சிறப்பாக வமுதரச கற்பமுண்ண
நேர்ந்திடுவாய் சத்துச்சித் தானந்தத்தின்
நிலையான வஸ்துவுந் தானேயென்று
ஓர்ந்திடுவாய் நின்பெருமை நிகழ்த்தப்போமோ
உண்மையறிந் துய்ந்திடுவா யீதுமுற்றே. (51)

கடைப்பிள்ளை ஞானத் தண்டகம் 50

முற்றிற்று.



மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் க. ரா. மு. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

நான்காவது

கடைப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய

# ஞானக்கக்ஷம் 80

ஆதியென்ற மூலமந்த்ரம் அரியென்றோதி
அறிந்தபின்பு நவக்கிரகக் கக்ஷத்தை
நீதியுடன் கருக்குருவாய் விளங்கவேண்டி
நிலையறிந்த கொங்கணவர் பாதம்போற்றி
ஓதியதோர் மந்த்ரகலைக் கியானமான
உண்மையென்ற வேதபூ ரணமேகாப்பு
சோதியென்ற ஆதார மூலமாகித்
துலங்குகின்ற கணபதிதாள் துணைகொண்டேனே.

கொண்டதொரு நாதவிந்து கலையினாலே
குவிந்ததொரு நவக்கிரகக் கூர்மைகேளு
கண்டதொரு தசரேகை நேரேகீறி
கணக்காக அப்படியே குறுக்கேகீறி
ஒன்றுமுத லெண்பத்தோ ரறையுமாச்சு
உறுதியுள்ள அறைகளிலே உண்மையாக
அண்டர்பிரா னருளதனைச் சொல்வேன்மைந்தா
அக்ஷரமும் லக்கமுட னருளக்கேளே. (1)

கேளடா முதலறையில் கம்மென்றிட்டு
கெணிதமுடன் பதினொன்று லக்கம்போடு
காளடா மறுஅறையில் சம்மென்றிட்டு
கணக்குடனே எழுதிலே களிவாய்ப்போடு
தாளடா மூன்றறையில் டம்மென்றிட்டு
தன்மையுடன் பனிரெண்டு லக்கம்போடு
நாளடா நாலறையில் தம்மென்றிட்டு
நாட்டடா வெட்டிலே நலமாய்த்தானே. (2)

நாவென்ற அஞ்சறையிலே ரம்மென்றிட்டு
சங்கையுடன் பதிந்தறைந் தம்போடு
கோவென்ற ஆறறையில் வம்மென்றிட்டுக்
குறியாக ஒன்பதுதான் குணமாய்ப்போடு
மாவென்ற ஏழறையில் யம்மென்றிட்டு
மார்க்கமுடன் அருந்திலை வளமாய்ச்சேரு
தேவென்ற எட்டறையில் உம்மென்றிட்டுத்
திறமாக லக்கமது பத்தும்போடே. (3)

போடப்பா ஒன்பதென்ற அறையிலேதான்
புத்தியுடன் ஓம்மென்று ஆறும்போடு
விடப்பா வைகிரக வெளியதாக்க
மேவிநின்ற நவபீசம் ஒன்பதாக்க
நாடப்பா லக்கமென்பத் தொன்றுமாக்க
நலமாக நடுவிலேயைப் பிடித்துமாறு
ஆடப்பா வென்பத்தொன் றறையிலேதான்
ஆட்சமுட னட்சாமும் வகைகம்பாரே. (4)

பாரப்பா லக்கமெபதி அக்கரங்கள்
பதிவாகச் சமைப்பித்து மைந்தாகேளு
நேரப்பா ரேகைமுன்ன குலம்போடு
நிசமான சக்கரமுஞ் சதுரமாக்க
காரப்பா சக்கரத்தின் மேலேமைந்தா
கனிவாக ரவிவளையம் முன்றும்போட்டு
சேரப்பா வளையமதி விருப்பகன்போட்டுத்
திருவான கோட்டைநால் வாசல்கட்டே. (5)

கட்டியதோர் நால்வாசல் தன்னிலேதான்
கருவாக நால்வேதந் தன்னைமைந்தா
இட்டமுடன் நிறுத்துதற்கு விபரங்கேளு
சிவசிவா மேல்வாசல் ருக்குவேதம்
சட்டமுடன் கீழ்வாசல் சாமவேதம்
சமரசமாய்த் தென்வாசல் யசுர்வேதந்தான்
இட்டமுடன் வடவாசல் அதர்வவேதம்
இன்பமுடன் நால்வேதஞ் சமுத்திவ்வே. (6)

சுருதியுள்ள மந்திரந்தான் ருக்குவேதம்
சுகமான உயிரிதுதான் லாலீலூலம்
கருதியதோர் வேதமடா சாமவேதம்
கலையான உயிரிதுதான் சாசிகுசம்
பருதியுள்ள எசுர்வேத முயிலாக்கேளு
பாலகனே நாரீறா நம்மென்றேதான்
உருதியுள்ள வேதமதர் வணவேதத்தின்
உண்மையுள்ள யுயிரது ரீரூம்மென்னே. (7)

என்னவே நால்வாசல் நாலுவேதமீ
இன்பமுள்ள உயிரெழுத்தை யதிலேநாட்டிச்
சொன்னதொரு சக்கரத்தை யெதிரேவைத்துச்
சுகந்தமல ரட்சதையுந் தூபந்தீபம்
கண்ணிறைந்த காட்சியிரு லுபசரித்துக்
கருத்துறவே மானதமாய்ப் பூசைபண்ணிச்
சென்னிமையைத் தானோக்கிச் செபமேசெய்யச்
சிவசிவா மந்திரத்தின் செயலைக்கேளே. (8)

செயலான செயலறிந்து உருவேசெய்யத்
தீர்க்கமுள்ள மந்திரத்தைச் செப்பக்கேளு
சயமான ஐஉஅசிவ யநமவென்று
சத்தமுட னிருதயமாங் கமலத்தேகி
நயமாக நூற்றெட்டு உருவேசெய்தால்
நவக்கிரகக் கக்கிஷந்தான் சித்தியாகும்
மயமான நவக்கிரகக் கக்கிஷந்தான்
மார்க்கமுட னுடுகிற சித்துக்கேளே. (9)

சித்தென்ன கருவிடயம் நன்றாய்ச்சொல்வேன்
சிவசிவா நன்மைதின்மை ரெண்டுக்குந்தான்
சத்தமுடன் நின்றுவிளை யாடுமிந்தச்
சுருதியுள்ள நவக்கிரகக் கக்கிஷந்தான்
நித்தமுமே நேமமதாய்ப் பூசைசெய்தால்
நினைத்தபடி நின்றுவிளை யாடலாகும்
புத்தியுடன் நீயிருந்து புருவத்தேகிப்
···ணத்தின் கிருபையினாற் கருவைக்கேளே. (10)

கருவான வுறுதியென்ன வென்றுகேட்டாற்
கற்பூர மஞ்சளுடன் புழுகுசேர்த்துத்
திருவான அமுதப்பால் தன்னாலாட்டித்
திறமான நவக்கிரகந் தன்னிலேதான்
குருவான பதிநோக்கி நன்றாய்ப்பூசிக்
குணமாக மானதமாய்ப் பூசைசெய்து
உருவான மானிடர்க்குக் கட்டுறுத்தால்
உத்தமனே அவரிருந்து ஒதுங்கிப்போமே. (11)

ஒதுங்குமடா பில்லிமுதற் பிசாசுபேவல்
உத்தமனே கண்ணேறு நாவேறுந்தான்
ஒதுங்குமடா நெஞ்சடைப்பு மூர்ச்சைவாயு
ஒடுங்காத அஷ்டகுன்மம் அட்டகாசம்
ஒதுங்குமடா வலிப்புடனே பிரமைதோஷம்
ஓயாத சலக்கழிப்பு மூலரோகம்
ஒதுங்குமடா வெகுகோடி நோய்களெல்லாம்
உண்மையுள்ள சக்கிஷத்தி னுறுதிகேளே. (12)

உறுதியுள்ள நவக்கிரகச் சக்கிஷத்தின்
உண்மைதனை யாவருக்கு முரைத்தாயானாற்
பருதிமதி சுடர்தனை மறந்துநீயும்
பாழ்நரகி லுனதுசடம் பதிவதாகும்
சுருதிதனை மறவாமல் மனத்தைக்காத்துச்
சொர்க்கபதம் சேரவென்று லடக்கம்பண்ணு
சுருதிபதோர் சக்கிஷத்தை மைந்தாநீயுங்
கருத்துறவே மவுனமதாய்க் கனிந்துபாரே. (13)

கனிந்துமிகக் கருவிடயம் நன்றாய்ப்பார்த்துக்
கண்ணான பிள்ளைகட்குக் கருவைச்சொல்லு
அணிந்துமனம் பூண்டதொரு ஆசான்பிள்ளை
அன்பான சிஷருக்கு நன்றாய்ச்சொல்லு
துணிந்துமனு நீதியுள்ள ராஜபுத்ரன்
சுத்தமுட னிவர்களுக்கு ஞானமீய்ந்தாற்
பணிந்துநின்ற சிஷருக்கு மோட்சமுண்டாம்
பாலகனே குருதனக்கும் பலனுண்டாமே. (14)

ஆமப்பா யின்னமொரு கருமானங்கேள்
ஆகாத சத்துருமா ரணத்தைக்கேளு
சாமப்பா மயானத்தின் கரியோடொக்க
கவருதே காந்தமொடு மண்ணுஞ்சேர்த்துத்
நாமப்பா கோழியுட வுதிரத்தாலே
தானரைத்து வழித்தெடுத்து வைத்துக்கொண்டு
ஓமப்பா சத்துருவின் பேரைநன்றாய்
உண்மையுடன் காரீயத் தகட்டிற்குத்தே. (15)

நாக்கிமறு புறத்தில்நவக் கிரகருட்சம்
தானெழுதி யதைமருந்தை யதிலேபூசித்
தூக்கியே எருவடிக்கி யதன்மேல்வைத்துத்
தூறாறும் என்றுஅனல் மூட்டினக்கால்
நோக்கியதோர் சத்துருவும் நொடிக்குள்ளே
நொந்துமிகக் கரைந்துஅவன் நொருங்கிப்போவான்
நீக்கொடுமை யதிலும்வெகு கொடுமையப்பா
நினைந்துவரும் சத்துருமா ரணமிதாமே. (16)

நாமென்ற மாரணத்தி லநேகமுண்டு
ஜடுதியிலே கேளாது வெகுநாட்செல்லும்
ஓமென்ற கக்கிஷத்தின் வித்தைபோலே
ஒருநாளுஞ் சொல்லாது மைந்தாமைந்தா
ஆமென்ற நவக்கிரக கக்கிஷத்தை
அப்பனே பதனம்வெகு பதனம்பண்ணு
நாமென்ற அகமதனால் வெளியிற்சொன்னால்
நந்தியிலே தீப்பிடித்து நசிக்கும்பாரே. (17)

நசித்துடிகப் போகாமற் பதனம்பண்ணு
சாதாந்த நந்தியொளி நயனம்பாரு
பசித்துவரும் பரதேசிக் கன்னம்போடு
பாலகனே ஆதாரப் பதியில்நில்லு
விசித்திமின்மே லாக்கினையாம் மேலாதாரம்
விண்டங்காக் கண்ணொளியை மேவிப்பாரு
நிசத்தில்மனம் நிலையாத மூடரோடே
நீமகனே பேசாதே நிலையைப்பாரே. (18)

## யோக ஞான சாஸ்திரத் திரட்டு.

பாரப்பா நிலையறிந்து நிலையைப்பாரு
பதிவான கலையறிந்து வாசியேறு
நேரப்பா நின்றநிலை வாசியாகும்
நிலையான பூரணமே போதமாகும்
சாரப்பா போதமென்ற ஞானந்தன்னைக்
கன்றுமனக் கண்ணதனால் விண்ணைப்பற்றிச்
சாரப்பா நல்மதியே நாச்சதமென்று
சங்கையுடன் தக்கதைத் தனதாய்க்காணே. (19)

காலையிலே தேகசுத்தி குருவைச்சொல்வேன்
கருவறிந்து மதிபெறக் கமலம்போற்றும்
புணையே டம்பதி நன்மிக்காக
புத்தியுடன் அகசுத்தி தேகசுத்தி
பேணவே செய்யுமிப் போதிலேதான்
பேசாதே மவுனமதா யிருந்துகொண்டு
தோணவே தந்தசுத்தி செய்துமைந்தா
சுகமாகக் கமண்டலநீர் தன்னைவாங்கே. (20)

வாங்கினதும் தேகசுத்தி செய்யும்போது
மவுனமுடன் ஸ்ரீபவ சிவாவென்றேதான்
பாங்குடனே பதினாறு உருவேசெய்து
பத்தியுடன் தேகசுத்தி செய்தாயானால்
தீங்கான தீங்குகளும் விலகிப்போகும்
திருவான தேகமதிற் செயலுண்டாகும்
பூங்கமல மாதுகுடி கொள்வாளய்யா
புத்தியுடன் தேகசுத்தி புனிதஞ்செய்யே. (21)

புனிதமுடன் தேகசுத்தி செய்துகொண்டு
பூரணமாய்ச் செபதபத்திற் பொருள்கண்ணூட்டி
கனிகரண நித்யகர்ம அனுஷ்டானத்தைக்
காலறிந்து தவறாது அருவேசெய்தால்
மணிகரண நாதமடா செவியிற்கேட்கும்
மகத்தான கற்பூரத் தீபந்தோணும்
தெளிதமுடன் அத்தீபச் சுடர்தன்னிலே
கேண்மகனே அண்டர்பதங் காணலாமே. (22)

காணலாங் காரணமாங் கடைக்கண்ணுன
கருணைவளர் சொர்க்கணவர் பாதந்தன்னைப்
பூணவே மனதுருக நின்றேனப்பா
பூரணமாங் காரணத்தின் பொருளைக்காட்டித்
தோணவே ஐந்நூற்றி யைம்பத்தேழிற்
றூலக்குமணி கடேசிகடைப் பிள்ளையென்று
பேணவே மகுடமணிக் குளிகையீந்து
பெருகிநின்ற முக்தியினை யீந்தார்தானே. (23)

தானேதான் தானென்றுஞ் சுயம்புவாகித்
தன்னருளா லாத்மாவை மவுனஞ்செய்து
தானேதான் மையமென்ற புருவமத்தி
சமரசமாய்ச் சுழிமுனையென்ற நாட்டங்கண்டு
தானேதா னுறுவறை மேலேநின்று
தற்பரமாம் பரப்பத்தி முக்கோணத்தில்
தானேதான் திரிகோணத் துள்ளமைந்த
சகலகலை ஆன்மாவைப் பூசைசெய்யே. (24)

செய்யப்பா சச்சிதா னந்தியென்று
தீர்க்கமுடன் மவுனத்துள் மவுனமாகி
செய்யப்பா தசமான திசைரூபத்திற்
செயமான யோகமென்ற திசைக்குள்ளே
செய்யப்பா ருசகமென்ற மூலருசகத்
திருவான அண்டமென்ற தங்கமேரு
செய்யப்பா அம்மேரி லிருந்துகொண்டு
சிவசிவா சிவயோகஞ் செய்துபாரே. (25)

பாரப்பா சிவயோக மதிகயோகம்
பரமான நவக்கிரகச் சக்கிரந்தான்
நேரப்பா பொதிகைமுனி கூறாய்ச்சொன்னார்
நிசமான நவக்கிரக பீசந்தன்னைச்
சேரப்பா அதில்மறைத்து லக்கமாகச்
செப்பினார் உட்பிசகுஞ் செப்பவில்லை
காரப்பா யிந்தநூல் தன்னிலேதான்
கணக்காக வகையுடனே துகைசொன்னேனே. (26)

பூரணமாய் நின்றதிரு வுருவிலேதான்
　　பொருந்திநின்ற சுபமதுக்க வகையைக்கேளு
காரணமாம் அகாரமது மைந்தாகேளு
　　கருணையுட னுன்னிடான்று செய்த்தபின்பு
தாரணையாம் உகாரமடா சத்திகாணு
　　சமரசமாய் நாதாதி பரனக்தன்னைச்
சாரணையாய் வெளுளியமை தன்குருவைக்கத்தா
　　சங்கையுடன் நாவபுட்டத் தான்தானாமே. (35)

ஆமப்பா அகாரமுடன் உகாரம்ரெண்டும்
　　அறிந்தானை அறிவையிருந் கொண்டாயானால்
போமப்பா பமான சுற்றுவான்கள்
　　பொருந்திநின்ற மூலஅனல் தன்னாலைமைந்தா
ஓமப்பா ஒழுங்கு அகன்றுபோகும்
　　உத்தமனே மறுபிறவி யில்லையில்லை
காமப்பால் கானப்பா லறிந்துகொண்டு
　　சக்கிஷமாம் நவக்கிரகச் சூட்சம்பாரே. (36)

பாரப்பா சூட்சமென்று வினைசூட்சம்
　　பதிவான நவக்கிரக மூலசூட்சம்
காரப்பா சூட்சநிலை கமலவீடு
　　கருணையுள்ள சிகாரமடா ஒளிகண்பார்வை
நேரப்பா நிலையறிந்த பார்வைதன்னால்
　　நிலையான கண்ணறிந்து தன்னைப்பாரு
தூரப்பா அடிமுடியுந் தானேதானுய்
　　சோதியென்ற ரூபமடா அரூபந்தானே. (37)

தானான ரூபமடா அரிஓம்மென்று
　　சங்கையுடன் நூனறியத் தன்னைப்பார்த்துக்
கோனான நந்திகொலு வாகிநின்ற
　　குருவான பீடமடா புருவமத்தி
தேனான மத்தியடா மூனைமையத்திற்
　　றேனருவி பாயுதடா அடியில்நின்று
ஊனான அமுதரசங் கொண்டேதேறி
　　உள்ளபடி நிலைவாசல் தன்னைக்காரே. (38)

காரடா பஞ்சிலையை பறித்துகொண்டு
கண்மூக்கு மத்தியிலே யிருத்துபாரு
நேரடா நிலையான வாசல்தன்னில்
நின்றிலங்குங் கோபுரந்தான் சோதிப்பாலே
பாரடா அடிமுடியு மொன்றாய்க்கண்டு
பத்தியுட னக்கனையே தன்னைப்பாரு
தாரடா அடிமுடியு மொன்றாய்நின்று
துலங்குமடா சொருபமது அருபந்தானே. (39)

தானாகி யுள்ளமதே சோதியாகித்
தன்னொளியாய் நின்றபொருள் தான்றானாகி
வானாகி யுள்ளொளியாய் வாசியாகி
யுற்றகலை ரவிமதியாந் தழிலையாகி
ஊனாகி நானவனு மவன்றானாகி
சத்திகொண்டு வடிவின்ற தன்மையாகிக்
கோனாகித் தானவனாய் நின்றதப்பா
குருவான பூரணமாய் பிரமமாச்சே. (40)

ஆச்சப்பா பிர்மமய மாகிநின்ற
அக்கினியின் ஆவியடா சத்தமாச்சு
பேச்சப்பா பெருகின்ற சத்தவெள்ளம்
பெருகின்ற அருவியடா அமுததாரை
நீச்சப்பா நிலையான தாரைதன்னில்
நினைவுகொண்டு மனதறிவால் நீயாணம்பண்ணு
மூச்சப்பா ஓடாது நடுவில்நின்று
முழங்குமடா நாதவொலி செவியிற்கேளே. (41)

கேளடா தனித்திருந்து தன்னைப்பார்த்துக்
கேசரத்தின் சமாதிக் கலையிலேறு
ஆளடா அந்தமனை சொந்தமாக
அதிலிருந்து வாசியினற் புருவத்தேகி
வாளடா மதியமுதந் தன்னைக்கொண்டு
வகையறிந்து சிவயோக வளமைபார்க்கக்
காலடா கலையறிந்து வாசிபார்க்கக்
கலையாகச் சமழியக் கருவைக்கேளே. (42)

கருவான இடகலைதான் சந்திரன்வீடு
கருணையுள்ள வலதுகலை சூரியன்வீடு
உருவாக விருவருமே யுகந்துநின்று
உரிமையுடன் சரமாறு முண்மைகேளு
திருவான மூலவனல் வாசியேறிச்
சிவசிவா அண்டபதஞ் சுத்திநல்ல
மருவுமுட னிடதுபுற நாசிதன்னிற்
பரிகிறது சந்திரகலை பரிந்துபாரே. (43)

பாரப்பா வலதுபுற நாசிதன்னிற்
பரிவாக நடக்கிற சூரியன்மைந்தா
நேரப்பா சூரியனே பெரும்பாக்கியமோர்
நிற்பதின்று இருபேரு மொன்றாய்க்கூடி
காரப்பா சுழினையென்ற மையந்தேகிக்
காலாறி யடங்கிற கருவைக்கேளு
சாரப்பா சந்திரகலை தன்னைமைந்தா
சங்கையுடன் சூரியனிற் சாரப்பண்ணே. (44)

பண்ணப்பா பெற்றவித மென்றுமைந்தா
பரிவான வலதுநாசி யோடுதாஸ்மேல்
நன்றாமாய்த் தானிருந்து விண்ணைநோக்கச்
சுடர்போலச் சூரியனே பிரகாசிக்கும்
என்றுமப்பா பிடித்திருந்து சுழினைமேவி
இன்பமுடன் ஜெபதபங்கள் செய்தாயாகில்
என்றுமனக் கன்னமு மொன்றாய்க்கூடி
சுகமோடு மேம்பாராய் வாழுவாமே. (45)

ஆமப்பா சூரியனே ஆத்மாவாகும்
அழிகிறதோர் சந்திரனே மாயைமாயை
ஓமப்பா மாயைதனை நீக்கிமைந்தா
ஒளிவான சூரியனை நம்பினக்கால்
போமப்பா சகலவினை யொழிந்துநல்ல
பொற்கமலம் போலவுமே தேகமாகும்
காமப்பால் கானற்பா லறிந்துமைந்தா
கலைதவறு நருவேறக் கருணையாமே. (46)

கருணையுள்ள வைக்கிரகக் கக்கிஷத்தைக்
கண்டறுமனக் கண்ணாலே தியானம்பண்ணி
ஒருமையுடன் [illegible] புரி[illegible]கும்
உண்மையென்ற [illegible]
அருமையுள்ள வாலையடா [illegible]
அங்கயனு தங்கமய மாகும்பாரு
புருவமையத் தொளிவான நந்திபாதம்
புத்திகொண்டு சத்தமதாய்ப் பூசைபண்ணே. (47)

பூசைசெய்யும் வைக்கிரகந் தன்னைக்கேளு
புத்தியுடன் சொன்னவர் பாதம்போற்றி
தேசமுள்ள சூரியனுஞ் சந்திரனிரண்டும்
சேர்மையுள்ள சேத்திரமாய் நின்றதையா
பாசமுள்ள சேத்திரமாம் [illegible]
பக்குவமாய்ச் சுழிநாடி [illegible]
தோசமென்ற குழ்வினைகள் தாமே[illegible]
துலங்குமடா கற்பூர தீபத்தாலே. (48)

தானான தியமதைத் தினமும்நோக்கிச்
சாந்தகுண மாகவேநீ யிருந்தாயானால்
கோனான ரவிசோமன் தன்னுள்வந்து
குற்றமொரு நாளுமில்லை சத்தமாகும்
ஊனான காயமடா விரகபீடம்
உறுதியுள்ள பீடமதி லுரிமைவைத்துத்
தேனான ருசிபோலே காத்தாயானால்
செம்மையுள்ள தேகமது உண்மையாமே. (49)

உண்மையுள்ள செவ்வாயும் புதனுஞ்சேர்ந்து
உற்றசெந்த மனுசாரிக்கும் சூக்குமுள்ள
தன்மையுடன் சூக்குமணி தன்னைப்பார்த்துச்
சாமறிந்து சாமாறிச் சாத்திலின்றும்
வன்மையென்ற கூற்றுவனும் மாறிப்போவான்
மகத்தான சோதியடா பிரகாசிக்கும்
நன்மையுள்ள தேகமது நாசாதையா
நாட்டமுடன் சாமறிந்து ரவியில்லிலே.

ஆமப்பா சவிபூரணம் லக்கிசையாரும்
அப்வாசியிற் சாஸ்வதியன் ருடைய்திர்தாம்
ஆமப்பா அமுரிருந்த மதிரிசையா
அமுரிர்ச பாமிருநாக நாக்குநாகு
ஆமப்பா அன்றுக்கு உடைறு சேசட
அப்பனே மனதுறுதி பாகிர்ந்து
ஆமப்பா மந்திரங்கள் செபிக்கும்போதில்
அப்பனே சனிதேரமூம் விளையும்போமே. (55)

போருமடா நாவிற்கின்ற தேவமெல்லாம்
புத்தியுட னச்சரங்கள் ஜெபிக்கும்போதில்
ஏருமடா மதியமுதம் நாவில்வின்று
இன்பமுட னந்தமுதங் கொண்டயானால்
வாருடைய தேகமதில் கோடமில்லை
மைந்தனே டன்வாக்கு அமுதவாக்கு
பாருடைய வாக்கதிற் சொல்லும்வார்த்தை
பலிக்குமடா அச்சரத்தைப் பதிவாய்போதே. (56)

பதிவான ராகுவுட லிங்கமேது
பாலகனே சொல்லுகிறேன் லிங்கம்லிங்கம்
தெரியான லிங்கமடா பிரமலிங்கம்
தேசத்திற் பூரணமா மமுதலிங்கம்
விதியான விதிவளரும் லிங்கலிங்கம்
வேதாந்த அமுதரசஞ் சொலிக்கும்லிங்கம்
நதியான லிங்கமதில் மனதைநாட்டி
நமுவாமல் மனதிருக்கப் பூசைபண்ணே. (57)

பூசையென்ன அந்தலிங்கந் தன்னிலேதான்
பூரணமாய் நிறைந்துவரு மமுதம்வாங்கி
நேசமுடன் சதாகாலம் பானம்பண்ணி
நின்றேகந் தனக்குமொரு பகையுமில்லை
ஆசையுடன் தேகமதைக் காக்கவேணும்
அன்புவைத்து ஜெபதபங்கள் செய்யவேணும்
வாசமுட னேகாந்த மாகநின்று
மைந்தனே சாத்திரத்தைப் பார்த்துத்தேறே. (58)

தொழிலான வழிதுறைக ளென்னவென்றாற்
சுத்தமுடன் வக்கிரகச் சுருவெடு, தால்
தொழிலான அஷ்டகர்மந் செய், ர்ப்பாரு
சுத்தமுள்ள திரமதிலே பலன் தானமைத்தா
தொழிலான பலதொழில்கள் கருவிருலே
தொக்கவினை தனையகற்றி யத்தம்பார்த்தான்
தொழிலான சகலகர்மக் கிரகத்தாலே
சுருதிகண்டு சொரூபசித்தி பெற்றிறாரே. (63)

பாரப்பா பராபரம கண்டத்தன்றோ
பதிவான மானிடர்கள் தனக்குவைத்தா
வீரப்பா கொண்டதொரு வியாதிக்கெல்லாம்
விருப்பமுடன் புருவமதின் மேலாயிருந்து
கோரப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
சேமமுடன் ஓம்சவ்வும் சிவசிவென்றோதான்
காரப்பா விபூதியைநீ தியானம்பண்ணிக்
கர்மவினை நோயாளர் தனக்குக்கீகவே. (64)

கேளடா நோயான ரெதிரேவந்தாற்
கிருபையுடன் விபூதியைநீ கடாட்சித்தப்பாற்
கேளடா நோயாளி தன்னைநீயும்
கெருடபா ருவையாக நன்றாய்ப்பார்த்தால்
கேளடா சகலபிணி யொழிந்துபோகும்
தெளிதமுடன் பூரணத்தைத் தியானம்பண்ணி
கேளடா நவக்கிரகச் சக்கிஷத்தைக்
கெட்டியாய்த் திட்டமுடன் பூசைபண்ணே. (65)

பண்ணப்பா இன்னமொரு கருவைக்கேளு
பார்தனிலே பெண்களுக்குச் செம்போகம்
முன்னப்பா செய்தவக் குறையினாலே
மூடிநின்ற பாசமது அகலக்கேளு
விண்ணப்பா தானேக்கி (நவக்)கிரகருட்சம்
மேன்மைபெறத் தானெழுதித் தியானம்பண்ணி
கண்ணப்பா பெண்களுக்குக் குளிசங்கட்டி
நன்மையுள்ள வரிசையொன்று இன்னங்கேளே. (66)

கேளடா கருக்குழியில் நின்றபாசம்
கிருமையுடன் குளவிலக மருந்தாமேகேளு
கேளடா அ[illegible] முகக்குழிகளிற்
[illegible] நல்லெண்ணெயாய் தன்னைவாங்கிக்
கேளடா அத்தாளிலெண்ணெய் தங்கிலேதான்
கேள்வியென்ன பெருங்காயத் தன்னையுரைத்துக்
கேளடா பெண்ணுடம்பிற் றடவித்தாலும்
கெட்டியாய்ப் புருடனையும் பேசச்சொல்லே. (67)

சொல்லடா நான்மூன்று தினத்திலைத்தா
சுத்தமுடன் மாதுமாதி தனக்குத்தானும்
நில்லடா சாப்போதே கருவுந்தங்கி
நேர்மையுள்ள கெர்ப்பமதாய்ப் பிள்ளையுண்டாம்
அல்லடா இதின்விபரம் வைத்தாயேயும்
ஆருக்குஞ் சொல்லாதே அறிவாய்பின்னு
செல்லடா இக்கமுறை நாதன்சொல்லச்
செம்மையுடன் தானறிந்து தெளிந்தேன்பாரே. (68)

தெளிந்துகொண்டு வைக்கிரம கக்கிஷத்தைச்
செம்மையுடன் சற்குருவின் பாதம்போற்றி
அறிந்துமனைக் கனிவதனுற் பூசைபண்ணி
ஆதார மூலமதை யன்பாய்க்கண்டு
தெளிந்துமன மலையாமல் வாசியேறி
தேற்றிகடுப் புருவமையச் சுடரைப்போற்றிக்
குளிர்ந்துவரு மமுதரச பானம்பண்ணிக்
குருவான பதிதனிலே குவிந்தேன்பாரே. (69)

பாரப்பா குவிந்துமனங் கொண்டுநல்ல
பதிவான கலைக்கியானந் தன்னைப்பார்த்துக்
காரப்பா சத்தியதம் பூசைபண்ணி
கனிந்துவரு மமுதரச பானங்கொண்டு
சேரப்பா நின்றுதவஞ் செய்தாகில்
நிலையான பூரணமும் நேராகும்
வீரப்பா கொண்டதொரு புத்தியாலே
மெய்மறந்து நின்றநிலை விண்ணாண்காணே. (70)

காணப்பா ஐம்பூதங்கள் செனிப்பதற்குக்
கருவான பூமியுடன் வளமைகேளு
பூணப்பா குறிஞ்சிப்பிருதிவியுமாகும்
புகழான நெய்தலில் அப்புவாகும்
பேணப்பா மருதநிலம் தேயுவாகும்
பலமான முல்லைநிலம் வாயுவாகும்
ஊணப்பா பாலைநிலம் ஆகாயந்தான்
உத்தமனே அஞ்சினில்த் தன்மைதானே. (71)

உண்மையுள்ள பஞ்சநில மஞ்சிலேதான்
உத்தமனே மூன்றுநில முண்மையுண்மை
நன்மையுள்ள மூன்றுநில மேதென்றக்கால்
நலமாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தன்மையுள்ள குறிஞ்சிநிலஞ் சித்தர்க்காகும்
தயவான கெவனிகட்குஞ் சார்வாமைந்தா
இன்மையில்லா மௌனசிவ யோகிக்கெல்லாஞ்
சிவசிவா குறிஞ்சிநிலந் திரந்தான்பாரே. (72)

பாரப்பா இல்லறத்தோ டொத்துநின்று
பதிவான ஞானசிவ யோகிக்கெல்லாம்
நேரப்பா மருதமுல்லை நிலமிரண்டும்
நேர்மையுள்ள செபதபத்துக் குறுதியாகும்
காரப்பா சம்சாரிக் காகுமிந்தக்
கருணையுள்ள நிலமதுதான் மெத்தநன்று
வீரப்பா பாலைநெய்தல் நிலமிரண்டும்
வெகுகடினம் வெகுகடினம் சுத்தப்பாழே. (73)

சுத்தமுள்ள நிலமதிலே பஞ்சில்மூன்று
சுகமான அகமதிலே சூழ்ந்தபாரு
பத்திமுடன் பார்த்ததிலே பதிவாய்நின்று
பதியறிந்து கெதியறிந்து பதிவாய்நின்றால்
புத்தியது கோசரமாய்ப் பிரகாசிக்கும்
பூரணமுங் காரணமும் பொருந்திவாழும்
சித்தமுடன் நிலையறிந்து நிலையைப்பெற்றுச்
சின்மயமாய்த் தன்மையுடன் னன்மையாமே. (74)



உ

முருகன் துணை.

ஸ்ரீ நந்தாவது

சடைப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய

# சிவயோக ஞானம் 100.

## காப்பு.

பூமகள் மணர்க்கண் வாலை பொருந்திய நந்தி காப்பு
மாமகள் மனுனத் தாதி வாசியுள் மூலங் காப்பு
நாமகள் கமலக்கண்ணாள் நாதாந்தத் தங்குங் காம்பு
மூமகன் கிருபையாலே முன்னவன் காப்புத் தானே.

பூத்திடு முருகன் காப்பு புருவமை யக்கன் காப்பு
சேத்திடு மருட்கண் காப்பு சின்மயக் கண்ணே காப்பு
வேத்திடு மையயன் பங்கன் வேதாந்தக் கனலி புக்கன்
காத்திடு மௌனிகண் காப்பு கடைக்கண்மூப் பாழ்கண் காப்பே

## வேறு.

காப்புலி சீப்புலி கருத்தங் கோப்புலி
தீப்புலி தின்றுநான் செத்து நின்றுகொண்
டாய்புலி புன்முனை படங்கிச் சூத்திரம்
நூப்புலி மலிகுடி நூரிற் புக்குவாம்.

புலிநூரிற் காடியென்றே னப்பாநானே
புலிபோலே பாய்ந்துதடா பாச்சல்கண்டு
புலிபோலே பதுங்கியொரு புத்திற்சார்ந்தேன்
புற்றில்வளர் குளியனது வெட்டிக்கொத்த
கலியாமற் புத்தரவு சிறிச்சீற
னாணுமொரு காடியெனப் புத்தில்நின்று
வலியாம லரவுபட மறித்துக்கொண்டு
வாயிலுள்ள விஷத்தையங்கே வாங்கினேனே. (1)

வாங்கியொரு கிள்ளிவெட்டு எலிபைக்கண்டேன்
வளுத்தஎலி பெட்டையஞ்சு கடுவன்மூன்று
பாங்குபெற எலிக்குவழி பெண்டான்வேறு
பக்கமதி லிருக்குமதைத் தொங்காய்க்கண்டேன்
தாங்கியதிற் பெண்டானில் வழியேசெய்யத்
தாட்டிகமா யெட்டெலியுந் துள்ளித்துள்ளித்
ஓங்கியது பெண்டானில் வழியேயோடி
ஒருமிக்க வந்ததடா ஒருமித்தேனே. (2)

ஒருமித்தேன் பெண்டானி லெலிதானெட்டும்
ஒழுடிந்து போகவல்லோ வந்ததப்பா
தருமித்தேன் பெட்டையது அஞ்சில்மூன்று
தனிப்பட்டு வந்ததடா திரும்பவஞ்சும்
ஒருமித்துப் பஞ்சான்றன் மடுக்கைபார்க்க
ஓடாது அஞ்சில்ரெண்டு மூன்றுதண்டாய்
ஒருமித்து எதிரேறிப் பெண்டான்றேடி
ஓரைந்து மூன்றுமொன்றாய்ச் சண்டாளாச்சே. (3)

சண்டாளைப் பெண்டானிற் சுட்டுத்தின்றேன்
சுட்டதிலே பச்சையடா வெடிவால்விசங்
கண்டாலு மூரிலுள்ளோ ரடிப்பாரென்று
கரையடியி லொருபுறமாய் வெளியில்வந்தேன்
உண்டான தோரடியில் மச்சங்கண்டேன்
ஓங்காரோ அம்மச்ச மானேனப்பா
சண்டாளில் முன்னெலிபோற் சுருக்கிக்கொண்டு
சுவாசம்விட்ட குறையாலே வழிகண்டேனே. (4)

வழியேதான் பாதையிலே குளியன்பாம்பு
வால்மடித்துச் சிரசுபடம் விரித்துக்கொண்டு
வெளியாடிச் சிறியங்கே பாதைகட்டி
விரட்டியது தூரத்திமெத்த வேகங்கொண்டு
குளியான குளியனது அலகுசாய்த்துக்
கொத்தயிலே கைவாசிக் குளிகைகொண்டு
தெளிவான சித்தரொன்று பிடித்தேன்பாம்பைச்
சிக்கியொரு பக்கமதாய்ச் சுகியமாச்சே. (5)

கருக்குமடா பூரணத்தின் முனையைப்பாரு
  சொல்லாலே தெரியாது மூக்காலப்பா
தருக்குமடா தருகாமல் தருக்கவென்றால்
  தன்வாயில் நாக்கிருக்க ஊமையாச்சு
வெருக்குமடா மனம்வெருக்கச் சொல்லப்போமோ
  விருப்பிருக்கப் பேசநாக் குள்ளாக்காமோ
செருக்குமடா கருநாக்குப் பலிக்குமப்பா
  கண்மென்றும் பொல்லாது கடினந்தானே. (14)

கடினமது திட்டிரெண்டு மொன்றும்பார்வை
  கள்ளனடா கிருஷ்ணனவன் கபடஞ்செய்வான்
கடினமவன் மாயைவெளிக் கண்ணன்கண்ணன்
  கசடருக்குச் சங்கார ருத்ரன்ருத்ரன்
கடினமடா யிவர்களுட மூலமப்பா
  கண்டவர்கள் கசடறுப்பார் கண்ணைக்கொண்டு
கடினமடா யிதற்குமொரு மூலங்கேளு
  கபடத்துச் சொல்லுகிறேன் கருத்தான்கேளே. (15)

கேளப்பா கருவூரிற் கொள்ளைகொள்ளை
  கேட்டவர்க்குக் கேளாமற் கூகூகூகூ
நாளப்பா யந்நாளில் நாவிதின்றேன்
  நான்செத்தேன் பிழைத்தனடா கட்டமென்ன
கோளப்பா சொல்லறியேன் கோலங்கோலம்
  கோலமெனக் கூக்குரல்போற் கூவுங்கோழி
தேளப்பா கருவிடையன் தெளிவாய்ச்சொன்னேன்
  தேள்கொடுக்கு மறியாட்டாற் கொட்டுந்தேனே. (16)

தேளிருக்குஞ் சவரோர மடிக்கப்போமோ
  செந்தேளுங் கருந்தேளுங் கொடிதாமப்பா
ஆளிருக்குஞ் சிவக்கயிலை நிழலுக்குள்ளே
  அமர்ந்திருக்குஞ் சாண்முழுத்துக் கடையியப்பா
ஆளிருக்கு மிடத்தேத வெழுந்தேள்மீறி
  அசைத்தசைந்து அசையாமல் நாலுநாளும்
கோளிருக்கக் கோளறுமோ கொட்டுந்தேளைக்
  கொட்டிடுற் கொல்லுமது கொட்டிக்கொல்லே (17)

கொல்லத்திற் கொச்சியடா மஞ்சளிஞ்சி
　　கொடிதான துலாவேற்று மிறைவைத்தனன்னீர்
கொல்லத்திற் கால்வாய்க்கா லிடக்கா லூடே
　　கொடுஞ்சுருக்கு மடைவாயிற் குமிழியாயும்
வல்லத்துக் கோட்டையடா மவுனராஜன்
　　வங்கணமாய் சிங்கமுக மாகும்பாரு
சொல்லற்றுக் கூக்குரல்போற் கூகூவென்னச்
　　சுகமவுன ராஜனவன் சோதிப்பானே. (18)

சோதிப்பான் சிங்கவங் கணமேசெய்தான்
　　சொல்லரிது மடைவாயிற் பட்சிபோலே
சோதித்து வருமச்சங் கண்டுபாரு
　　தொந்தமென வந்துவிடு மைந்தாமைந்தா
போதித்து ராப்பகலாய்க் கண்டுபோதி
　　போகமென்ன சிவயோகஞ் சிவயோகந்தான்
பேதித்து வாழாதே போதம்போதம்
　　பேசாதே மவுனமது கூக்கலாமே. (19)

கூக்கலென்று லதன்பெருமை சொல்லப்போமோ
　　கூகமென்ன சொல்லுகிறேன் குமரிகற்பம்
பார்க்கவென்றுற் கொடுமையடா பஞ்சவர்ணம்
　　பட்டமாம் பாலூறும் பஞ்சவர்ணம்
மார்க்கமிது பெரியோர்க ளாருஞ்சொல்லார்
　　மாச்சரியம் மெத்தவுண்டு உண்மைசொன்னேன்
தீர்க்கமிதை யறிபவனே சித்தன்சித்தன்
　　திறம்வேணும் மனதுறத்தாற் றிறமுமாமே. (20)

திறமான மனதுறக்கக் கருத்தான்கேளு
　　சித்தருடன் முனிவோருஞ் சொல்லாச்சொல்லார்
அறமான இல்லறமே சொர்க்கஞ்சொர்க்கம்
　　அந்தரமே யளிகாக மாகுமாகும்
அறமான இல்லத்தின் சூட்சங்கேளு
　　அடிக்கடிதான் சொல்லவது போகமப்பா
உறமான தனுபோகஞ் செய்யும்போது
　　உற்பனமாந் தப்பாது உண்மைகேளே. (21)

உண்மையென்றும் உறுதியென்றும் இறந்தானென்றும்
உற்பனமாய் மனதுறந்துப் பார்ப்பேனென்றும்
தன்மையுள்ள மனத்தாலே புத்திமெத்த
தயவுண்டு கல்மிஷங்க ளில்லையில்லை
நன்மையிது தானெனவே பெண்கள் தன்னை
நயந்தவரை உபசாரஞ் செய்துவிந்தைப்
பெண்மையவள் மையல்கொண்ட நாதம்வாங்கிப்
பிரியமுடன் வேணவிதஞ் செய்வார்பாரே. (22)

செய்வார்கள் கைமுறையாய்ச் செய்யமாட்டார்
சிவயோகஞ் சிவலிங்கங் காணமாட்டார்
கைவாசி சுத்தமென்று கொள்ளமாட்டார்
நெருக்குவைத்துக் கருவிடையங் காணமாட்டார்
மெய்வாய்கண் ணொளியொன்று மவுனஞ்செய்து
வீணருக்குத் தெரியாமல் விழலாய்ப்போச்சு
உய்வாய்தன் யோனிதனிற் பூசைபண்ணி
உபயமது சிவலிங்க மொன்றும்பாரே. (23)

ஒன்றான லிங்கமா விடையுமாகும்
உற்பனமாஞ் சித்தருட பூசையாகும்
ஒன்றான சத்தியுட பூசைமார்க்கம்
ஓகோகோ ஆனந்த மானமார்க்கம்
ஒன்றான திட்சைவழி மார்க்கமப்பா
உலகத்தோ ரறியாமற் கெட்டார்பாரு
ஒன்றான பூசையடா வாதிசத்தி
உற்பனமாம் பூசையிது வுண்மைதானே. (24)

தானான சத்தியுட திட்சைபூசை
ஞானவனைச் செய்வார்கள் கூடச்செய்வார்
மானான பெண்ணையொரு கொடியபெண்ணை
மவுனத்தாற் றியானித்து மகத்வமானார்
தேனான திப்பூசை தேவிபூசை
ஜெகஜாலச் சித்தருக்குத் தோணாப்பூசை
ஊனான தன்மையடா பெண்ணாள்தேவி
உறவின்முறை குருமுறையா யுரைக்கக்கேளே. (25)

உரைக்குமுறை கருவறியா ரிக்நூல்பார்த்தால்
உள்நின்ற பகையறியா ருறவுமாகார்
உரைக்கமன துறக்கவல்லோ சொன்னேனப்பா
உன்கருத்தா லுள்ளமதி லுள்ளந்தோறும்
உரைக்கமனந் தன்னிலையே உறவுமாகும்
உள்ளமதி லபிஷேக மனமாம்பூசை
உரைபழுதாய்ப் பழுதொன்றுஞ் சொல்லவில்லை
உன்மனத்தா யுன்மத்த மானுள்பாரே. (26)

பாரிதுவே பெரிதுசிறி திதுவேயூரும்
பதிவாகு முறவின்முறைப் பண்புமாகும்
பாரிதுவே முறையோடே யுறவாங்கன்னி
பண்டுளதாய் யோகி வந்தயோனி
பாரிதுவே ஆணாகிப் பெண்ணுமாகிப்
பகலென்றும் இராவென்றுந் தோன்றுங்கண்ணாய்
பாரிதுவே கண்ணான கண்ணேமக்காள்
பழுதில்லை பழுதில்லை கனியுந்தானே. (27)

கனியாதே மனதுமிகக் கனிந்தாலப்பா
கசடருக்குக் கனிதோணாக் கன்னிகன்னி
இனிதான கன்னியடா வென்தாயானாள்
என்மக்க ளுங்களுக்கு இவளேயானாள்
தொனியாதே பாதகர்க்குச் சொல்லவேண்டாம்
தோலாசை கொண்டவர்க்கு விள்ளவேண்டாம்
செனியாதே பேரின்ப வீடுயர்ந்தால்
தெரியாது தெரியடா யின்னைக்கேளே. (28)

இன்னமுமே வெளிதோணச் சொல்லக்கேளு
இன்பமுற்றுக் கேளாட்டாற் சிவமேயென்பார்
முன்னையுமே சொன்னதெல்லாம் நுணுக்கம்பாரு
முழுதுமது தெரியாட்டாற் பின்னேபாரு
கன்னமுமே தகரவடா அடித்துச்சொல்வேன்
கருத்தொட்டுக் காட்டையிலே கருவாய்ப்பாரு
அன்னமுமே பொசித்தாக்காற் பசியுண்டாமோ
அற்பிசியிற் கார்த்திகையில் அமையுந்தானே. (29)

அமைந்தநாதன் மார்சுழியாய்ப் போனவண்ணம்
அத்தையுமே மருமகளாய் வாசியானாள்
சமைந்தவனைக் கடகுயத்தைத் தழுவினுக்காற்
சந்திரனு மானசக மாறேயென்றே
சமைந்தவனைக்கும் நீயுமொன்றாய்ச் சாருமப்போ
தவிர்த்திருப்பர் கனறுலே கண்டாற்குட்சம்
சமைந்தவனைப் பார்த்துநிறைத்தக் கண்ணேகண்ணு
தல்கனறு மவன்கண்ணுங் குருடாய்ப்போச்சே. (30)

குருடர்களு வறியார குருடர்மெத்தக்
குருக்கண்ட கள்ளறியார் குருவைப்போற்றூர்
குருடரவர் காதுக்குக் குடுமிபோட்டுக்
குத்திரமாய் வேடங்கள் தரித்துக்கொண்டு
திருடரவர் சத்திசிவ பூசைகொண்டு
தேசத்திற் சென்றலைந்து பணங்கள்வாங்கி
வருடமவன் பெண்டிர்பிள்ளை பிழைப்புக்காக
வாய்ப்பேச்சாய்த் திரிவார்கள் மடையர்தானே. (31)

மடையருக்குள் ளிப்படியே வெகுபேருண்டு
மயக்கத்தால் வாய்ப்பேச்சால் மருளவேண்டாம்
அடையநத்துங் கண்மணியே கண்ணைக்கண்டு
கைப்பிடியாய்ப் பிடித்தக் கண்ணைப்பார்த்து
உடையவரும் லிங்கமா விடையமென்று
உலகப்பா கண்ணப்பா உள்ளன்பேகண்
நடையோருளன் வாசாலிங்கபூசை
சன்முமமாய்ப் பெற்றதித்தப் பூசைதானே. (32)

பெற்றவளே வற்றதிவள் தாரமானுள்
பிரியாத பார்வைதிறற் பெண்மையானுள்
கற்றவளே கடைக்கண்ணுற் பார்த்தாள்பார்த்தாள்
பெடமாய்ச் சொல்லறியேன் கண்டேன்கண்டேன்
குற்றமவள் பூசையிலே ஒன்றுமாகா
குமரிசிறு பிள்ளையடா கூச்சமிட்டாள்
சற்றவனைத் தியானத்தாற் பூசைசெய்யத்
தன்பேரு மவள்பேரு மொருபோச்சே, (33)

ஒருவருக்குந் தெரியாத ஞானரூபம்
ஒருசாண்டா பொன்றுதி புலகமாகும்
ஒருவருக்குந் தெரியாமல் மாண்டோர்போடி
ஒருமுடியாய் முடிந்துவிட முறையாச்சு
இருபேர்க்கும் முப்பேரா யிருந்தானாந்தான்
எத்தனையோ பேரிட்டு எண்ணப்போமே
அறுபேர்க்கும் அறுமுகமா யிருந்தியானும்
ஆகாச மிவர்பேரை அறிவீர்பாரீர். (34)

பாரறிய ஊரறியப் பரமசிவனிவளைப்
பற்றினபே ரெத்தனையோ அய்யோ அய்யோ
கூறியச் சிறுபிள்ளை யென்றாள்கன்னி
குணமிவளைப் பார்க்கவிற் றுணையேயானன்
ஆரறிய ஊரிலவி சரியாடி.
அயர்த்தயிடந் தெரியாம லைக்கியமானாள்
ஊரறியக் கைபிடித்தார்க் கவளோ யடி
உத்தமியா யிருந்தானைத் தொடுக்கின்றாளோ. (35)

ஒடுங்கிமனை தொடுக்கயிவ ளடக்கங்கெரு
உள்ளமடா தெரியார்க்குக் கள்ளங்கள்ளம்
கடுகளவு முழியிருக்க முழியிருந்தோ
கள்ளமுழிப் பார்வையதில் கனமொன்று
அடங்குகடை விழிப்புனலாந் துமிழியென்றாம்
அருபமா கறுப்பாகும் நடுவேபச்சைச்
இடங்கருவி லமைத்தபடி யென்றாள்கன்னி
இவள்கருவை யறியாதித் தனையுமாச்சே. (36)

இத்தாறு கோணமுக் கோணந்தத்தி
ஏகோபி மகாமந்த்ர மிவளோசத்தர்
சத்தருவி லவளொருத்தி முத்தியானாள்
கண்டருக்குப் பெண்டாகிக் கண்ணுமானாள்
அத்தமவள் கையிருக்க முகத்தைப்பார்க்க
அவள்முகமே கண்ணாக நின்றாள்கன்னி
உத்தமனை யிவள்மனைக்குக் கத்தன்கத்தன்
உச்சரத்தா லிவள்பேச்ச மிச்சமாச்சே. (37)

ஆச்சப்பா ஆதிசிவ பூசையாலே
அவனவரு மொன்றாகத் தோற்றுந் தோறும்
காச்சப்பா பழுத்ததொரு பழத்தைப்போலக்
கனிவான பொருளப்பா கண்டுதேறு
பேச்சப்பா சொல்லாதே சொன்னேன் கேளு
பேரறிவே ஞானதியே மனோன்மணியை
வாச்சப்பா சத்திசிவப் பாகத்தில்
வரிசையுடன் நிறுத்தியொரு வழுத்திநில்லே. (38)

நில்லடா சற்புத்திர ஞானற்கேளு
நித்தையிலே நிருமையு மில்லாமேத்த
நில்லடா மனம்புத்தி நினைவுமொன்றாய்
நிறுத்தியே மனந்திலொரு குறைவைக்கேளு
அல்லடா முன்மவுன மாத்திரன் தந்த
அமுதமது வுண்ணையிலே அக்கைரெண்டும்
சொல்லடா மெய்க்கையப்பா பாயுங்கையும்
சொற்பமென்றா எண்ணாதே சொல்லக்கேளே. (39)

சொற்கேளாய் மின்னாவென்றுச் சொல்லவேண்டாம்
சொல்லினால் தோஷமடா இனியுங்கேசம்
மூற்றோதிப் பேசாதே மூலங்கேளு
முப்மூல மொன்றான மூலமப்பா
சட்கோண வட்டமடா தனமாம்பாரு
சத்திசிவ லிங்கமென வந்தமூலம்
இட்கோல மானசத்தி தனயிரண்டும்
இந்தாகதி ரானகுறி யின்னங்கேளோ. (40)

கேளப்பா மித்திரனே விருந்துகொண்டு
கிருபைபெற்ற சிவானந்தி தியானம்பண்ணைக்
கேளப்பா குறிசொல்வேன் நினைவாய்க்கேளு
கிரியென்றும் ஸ்ரீயென்றும் இரண்டுமொன்றாய்க்
கேளப்பா முப்புமதிற்று டையுமானாள்
கிரிலகிரி கொண்டேறும் மலைக்கவேண்டாம்
ஆளப்பா மிவள்தன்னும் இடதுதன்யம்
ஆகிருஷ்ண னதற்குற்ற லெய்துவம்பாரே. (41)

பார்க்கையிலே மும்மூன்று மிரண்டொன்றாகும்
பகலவனு மிராக்கதிரு மானவாறும்
பார்க்கையிலே ஞாயிறுமே பகுதசன் றிங்கள்
பகலவனைத் திங்களிலே மாறிப்பாரு
சேர்க்கையிலே ஆதித்தன் சேருந்திங்கள்
சேர்ந்திரண்டு மொன்றான தன்மையப்பா
மூர்க்கமிதைப் பூசைபண்ண முத்தியாரும்
மும்மூன்று மொன்றான குட்சந்தானே. (42)

குட்சமதைப் பார்க்கப்பால் வண்ணமானோர்
சுயம்பாக மூலத்தெழுந்த லிங்கமானோர்
ஆட்சியிவள் தன்னையுந்தா னறியுமுன்னே
ஆரகார தலைவனையுங் கண்டார்கண்டார்
காட்சியிவள் கண்டகடைக் கண்ணேகாட்சி
கண்ணொன்றாங் கண்ணுள்ளே கண்டசோதி
குட்சமிவள் முழியறிந்து மாயையபேக்கிச்
சோதித்துப் பார்த்ததெல்லா முத்தியாமே. (43)

முத்தியு மொன்றாகி மூலத்தலிங்கம்
மூலத்திலே ஆவுடையு மானலிங்கம்
சத்திசிவ மானசிவ லிங்கபூசை
சதானந்தி சச்சிதா னந்தியாருள்
சத்தியமா யிப்பூசை சொன்னாளாச்சி
தன்னியத்திற் கன்றுடையாள் கண்ணேபத்துச்
சித்திபெற யிக்கண்ணை யறிந்தாற்பூசை
செய்பணாஞ் சிவபூசை தீர்க்கமாமே. (44)

ஆமப்பா யிப்பூசை ஆச்சிக்குள்ளே
அடக்கமடா சித்தருடன் முனிவர்சொல்லார்
நாமப்பா சொன்னதற்குக் கண்ணேயாகி
நடுக்கண்ணிற் கடைக்கண்ணு மொளியேயாக்கும்
நாமப்பால் காணப்பா விரண்டுங்கொண்டு
கண்கண்ட படியாலே சொன்னேனப்பா
ஓமப்பா யிப்படியே கண்டோர்க்கல்லால்
உரையறியா ரொளியறியா ருலகத்தோரே. (45)

உலகமதில் வேணபடி பூசைசெய்வார்
உள்ளபடி யுள்ளாச்செய லுணரமாட்டார்
பலகலைக ளோதியிதே யென்றேமாண்பர்
பற்றற்றார் சுத்தியுட னிட்டையாரார்
அலகையிலே யார்வினை தாக்கப்பேயசிக்
கெக்கியம்பொற் றக்கமிட்டுத் திரிவார்மாண்பர்
விலகியே மெய்க்கண்ணிற் கண்டாலப்பா
மெய்யான சத்திதனைக் கண்ணிற்காணே. (46)

காணாத காட்சியெல்லாங் கண்ணிற்காணும்
கண்டவரைக் கண்ணாலே யொளியுங்காணும்
நோணாத சிவகாசத்தப் பொருள்தான் தோணும்
சொல்லுற்ற பின்னாலே சொல்லொன்றுமில்லை
ஆணாக ஆண்பிள்ளை யென்றேகேளு
அங்கேறி சொக்கனைக் கண்ணிற்காணு
வீணாகத் திரியாதே மனத்தைபூணு
விட்டகுறை யிதுதானே வெளியுமாச்சே. (47)

வெளியொளியும் விந்துவை கண்ணேகண்ணே
வேதாந்தப் பாராமற் சும்மாவிலேனே
பழியாதே பெரியோரைப் பாவம்பாவம்
பாழ்நரகில் வீழாதே சொன்னேன்சொன்னேன்
வழியான பாதையடா யின்றாலப்பா
மங்கையர்மே லாசைகொண்டு மருளவேண்டாம்
தெளிவான மனமிரண்டும் ஒன்றுய்க்காணச்
சிவானந்த மதிபார்வை யிதுதான்காணே. (48)

இதனாலே யொருஜோதி யில்லையில்லை
இப்பொருட்குப் பணங்காசு செலவுமில்லை
இதனாலே காட்டிபடா தனங்கள்கோடி
இதுபோல முண்டாகுந் தேகசித்தி
இதனாலே பாவங்க ளறுப்பார் சித்தர்
இந்தமுறை வேதாந்தத் தாதியந்தம்
இதனாலே பூரணமுங் கண்ணிற்றோனும்
இடரொன்றும் வாராது திடனும்பாரே. (49)

திடமான மனதல்லோ திடந்தானப்பா
திருவான லட்சுமிப்பெண் ணூர்க்கமாருள்
குடமான கன்னியத்திற் பத்தாக்கண்ணும்
கூர்விழியாங் கண்பத்து தனத்திரண்டுஞ்
சடமான கொங்கைக்குட் கண்தானேது
சாத்திரத்திற் பெரியோர்கள் சொல்லாரப்பா
அடமான மங்கையடா சொல்லக்கேளு
ஆகாகா கொங்கைதன்னிற் கண்ணோக்கினோ. (50)

கண்ணான தொருகொங்கைக் கந்தேசகண்ணும்
கதித்தெழுந்த கொங்கைதனிற் பத்தாக்கண்ணும்
ஒன்றான கொங்கைக்கு ஒன்றேகண்ணும்
ஒன்றுமுதல் மூன்றாக இருந்தால்கண்ணும்
கண்ணான திருகொங்கைக் கந்தேசகண்ணுங்
கண்டாலு மெத்தவென்றா லாறாங்கண்ணோ
பெண்ணான கொங்கைக்கே கண்தான்பத்தாம்
பிரியாம லிருந்ததென்றால் முத்தியாமே; (51)

முத்தியா மிப்படிக்கண் ணறுங்கண்டால்
முக்கியமாம் பூசைவிதி முறையுமாமே
சத்தியாஞ் சித்தியடா முதகண்பாரு
சண்முகற்கு மமுதளித்த கொங்கைகொங்கை
புத்தியாய்க் கண்டறிவா யிந்தப்பூசை
புண்ணியற்கு மெய்யாமடா கர்மிக்கில்லை
உத்தியாய்ப் பாராதே குருவைக்காரு
உன்மனத்தைக் கண்டுகுரு வுபதேசிப்பார். (52)

உபதேசம் நந்திகுரு வாய்க்கவேணும்
உன்மனத்தா யமுதகண்பால் கொள்ளவேணும்
உபதேசஞ் சற்குருவைக் காண்பதெப்போ
உன்தேகஞ் சத்தியமாய் வாழ்வதெப்போ
உபதேச மானதெட்டி ரண்டெப்பத்தாய்
உட்கொண்ட தப்பாலு முதகண்பத்தாய்
உபதேச மானதிந்த முதகண்பார்க்க
ஒருபிள்ளை பிறவாதோ கருவாய்த்தானே. (53)

கருப்பத்தி யறுப்பதுங் கண்மணிபிள்ளாய்
கைப்பத்திக் கொண்டதைநீ முறுகண்பார்த்து
உருப்பத்திப் பத்திலையும் வந்தாய்வந்தாய்
உற்பத்தி கண்ணாலே குருவைப்பாரு
திருப்பத்தி சத்தியொளி கண்ணைகண்டாற்
ஜெயானந்தி குருவாகுங் கருவைச்சொல்வான்
விருப்பத்தா லாசதக்கேளு விண்ணைப்பாரு
விள்ளாதே கசடருக்கு வெளியாகாதே. (54)

ஆகாத பிள்ளையென்று லடித்துத்தள்ளு
அந்தமுது கண்ணாறிந்துண் டாகச்சேரு
வேகாத கால்தலையை யோதச்சொல்லு
விள்ளாதே வேதாந்த முடிவைச்சொல்லு
சாகாத தலையறிய மூக்கால்சொல்லு
சமூலமாய்க் காண்பதற்கு மூலஞ்சொல்லு
போகாத புனல்காட்டி மதியைக்காட்டிப்
புத்தியாய்ச் சிவசத்தி பூசைசொல்லே. (55)

சொல்லக்கேள் வாதமுறை சூட்சந்தன்னைத்
தொடுகுறியாய்ச் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
கல்லுக்கு ளத்தாலே பாரையுப்பைக்
கல்லுப்பைக் கண்டுமதி யுப்போடப்பா
புல்லுக்குள் நாதவிந்து உண்டுஉண்டு
புத்தியா யுப்பெடுத்து அப்புவோடே
மல்லுக்கு வென்றோடே கைகட்டாதே
வாதுக்குச் சொல்லுகிறேன் வாதம்பாரே. (56)

வாதநிரத் தாலேகால் வாதமாச்சு
வாய்ப்பாச்சு பொய்யென்றால் வீணாய்ப்போச்சு
நாதத்தில் விந்துவடா பூவிற்றுக்கு
நாக்குண்டு பேசுதற்குப் போக்கைக்கேளு
காதத்துக் கப்பாலே தூரமல்ல
கண்ணுக்கு மூக்குக்குச் செவிதோணு
சூதத்துக் கதிராலே யெல்லாந்தோணும்
சொன்னாலுந் தெரியாட்டாற் சும்மாபோமோ. (57)

போமோதான் ருகத்தில் வேதைகம்மா
　　போக்கறிந்தாற் சூதமடா அந்தா அந்தா
ஆமோதா னிதிஞலென் றெண்ணவேண்டாம்
　　அமுரியடா உப்பாலே குமரிநாதம்
வேமோதான் கோமுகத்தில் வேகம்வேகம்
　　வேகமா மூப்புடக்குக் குடமாம்வேதை.
ஓமோமோ சாக்குவகை சொல்லவில்லை
　　ஒருசாக்கும் வேண்டாங்கா ணுறுதியாமே. (58)

உறுதியா மெட்டுக்கு ளண்டபிண்டம்
　　உட்கருவும் வெளிக்கருவு மொன்றாய்க்காணும்
உறுதியடா வேதையிது வுண்மையாரு
　　உட்புகுந்து கருவிடையம் பார்த்தாற்கேளு
உறுதியடா கோமுகத்தில் வாதவித்தை
　　உப்பாலே ஆடுமடா தொந்தங்கோடி
உறுதியடா பிதைவிட்டா லொன்றுமில்லை
　　உத்தமர்க்கு உள்ளாமே யுள்ளத்தானே. (59)

உள்ளபடி சாத்திரங்கள் சித்தர்சொன்னார்
　　உட்புகுந்து மூதுகண்பார்த் தொளித்தாரப்பா
கள்ளமன்றிச் சொன்னேனு னிந்தநூலிற்
　　கருவிடையம் பார்த்திதனைக் கண்டாலப்பா
உள்ளமதிற் கன்னியடா ஓமசத்தி
　　உள்மணித்தாய் மணிகாட்டி யுரைப்பாளப்பா
விள்ளவென்று விதைப்பார்க்க விள்ளப்போமோ
　　வெளிதோணக் கருவிடையம் வெளியாய்த்தானே. (60)

வெளியல்லோ செவிக்குரைத்தார் சூட்சத்தாலே
　　விண்கண்ட தெந்தக்கண் கண்ணேகண்டே
வெளியல்லோ செவியாலே நன்றாய்க்கேளு
　　வேதாந்தஞ் செவிகேட்க இன்னங்கேளு
வெளியல்லோ மூச்சென்ற காலாற்றீயை
　　வேகத்தால் மூட்டியல்லோ வெளியைக்கண்டால்
வெளியல்லோ வாயிருக்க நாவும்பேச
　　வார்த்தையென்ன புருவமையம் நாவுமாச்சே. (61)

நாவாலே பேசுதற்கு நாவுமுண்டோ
நாதாக்கள் பேசாரகள் வேதாந்தத்தைச்
சாவாலே செத்தாலே அந்தம்போச்சு
சார்ந்துநின்ற லந்தமது அந்தமெத்தப்
பூவாயே காறுமது மனமுமாச்சு
புத்திகெட்ட மனத்தாலே விறுப்போச்சு
ஆவாலே புனவாட வுங்கைகொண்டு
ஆரோக்கட்டிக் காலாலே அமுதங்கொள்ளோ. (62)

அமுதமடா புத்திகெட்ட மாடேகேளு
அப்புவடா ஆயிரத்தெட் டிதழாய்நின்ற
அமுதமடா சத்தியமாய்ச் சொல்லக்கேளு
ஆச்சரியஞ் சொல்லவென்றாற் சொல்லப்போமோ
அமுதமடா முதுகண்ணாற் பாருபாரு
ஆனந்தம் பொங்குதடா அருவிபாயும்
அமுதமடா முதுகண்ணாற் கண்ணேயுண்ண
அரிவரியி னெழுத்தெல்லா மந்தமாச்சே. (63)

ஆச்சந்த மாகியடா முதலேசோதி
ஆகுமடா சரசுவதி நாவுக்குள்ளே
பேச்சென்று பேசாமற் பேசிக்கொள்ள
பேய்மக்கா ளுங்களுக்குச் சூட்சஞ்சொன்னேன்
ஏச்சென்று பின்னாலைச் சொல்லவேண்டாம்
ஏழையைப்போல் வாய்பேசா திருந்துகொண்டு
காச்சென்று காச்சிவிடு உலகத்தோரைக்
கைக்குள்ளாய் வருமட்டுங் கருவைப்பாரே. (64)

கருவறிய விந்நாளிற் கருத்தான்தோணும்
கருத்துவைத்துப் பாராட்டாற் கருத்தோஞ்சு
கருவறிய காமப்பால் கானற்பாலைக்
கருச்சொல்லிக் காட்டாமற் கொள்ளச்சொன்னார்
கருவறியக் கண்கெல்ல முதுகண்பார்த்துக்
கண்டபடி கொங்கணர்தன் கண்ணேயென்று
கருவறிய வித்தையுண்டோ குருவேஅய்யா
கண்காட்டுங் கண்காட்டு மென்றுகூவே. (65)

கூடுவா ரைந்நூற்றி யைம்பத்தேழிற்
குணமுடைய கடைப்பிள்ளை யாகத்தானே
கூடுவார் பதினெட்டுப் பேரோரெட்டாய்க்
கோத்திரமுஞ் சூத்திரமும் பார்க்கப்பார்க்கக்
கூடுவார் கடைக்காண்டத் தந்தத்தோடே
கோடியிலே நவகோடி சித்தாங்கரண
நாடுவார் கண்ணூட்டங் காண்பதேதான்
காதாந்தப் பூரணத்தி னிலைத்தானே. (70)

நாலான பூரணமே முதுகண்ணூதும்
நாதமடா நாதாந்த வித்தைதக்கேளு
காலான பனிரண்டில் நாலேவிந்து
காலெட்டுங் காயத்திற் சூட்சமூலம்
மாலான காயத்தில் சத்தில்லுண்ணில்
மகாரத்தில் மாயையைத்தா னறுப்பார்சித்தர்
வேலான வேலனுட கைவேல்சத்தி
வெத்திவே லெட்டான வேலும்ரண்டே. (71)

ரண்டெட்டும் பூரணமாய் நின்றவேலை
நாதாக்க ளாறுமுகமாய்க் கண்டாரவேலை
ரண்டெட்டிற் காலாலே யெண்காலோடில்
நாட்டினார் முக்காலும் வேலைக்கொண்டு
மூண்டொட்டா தசார்கிளை மாண்டுபோச்சு
முத்தியடா அறுமுகனார் கைவேலப்பா
ஒண்டொட்டா தசாரத் தவந்தான்போச்சு
ஓராறு மொருமுகமாய்க் காணலாச்சே. (72)

காணவே சாரூப சாயுச்சியத்தைக்
கண்கண்ட சாரூபங் கண்ணேரூபம்
தோணவே சாரூபம் வேகாக்காலைச்
சொல்லுக்குட் டெரியாத ரூபாரூபம்
ஊணவே முதுகண்ணால் மனக்கண்ணூண
உட்காலும் முக்காலாய் ரூபங்காணும்
நாணவே நாணாதே சொல்லக்கேளு
நாச்சியார் தெற்றியிலே சர்லையுமே. (73)

காணுமடி மனையிலே முக்காலமாய்க்
கண்காணு ரூபமடா நாங்காணும்
காணுவரி மூலத்தில யோகம்பாரு
கருவைபுரி திருமூலர் பாதம்போற்று
நூலான சாத்திரங்கள் பார்த்தாலென்ன
நூறுதர முபதேசஞ் சொன்னாலென்ன
சேலான மூலருட பேரனெங்கள்
சிங்கமடா கொங்கணர்தன் செயலைப்பாரே. (74)

செயலான கொங்கணரே யெங்கள்நாயன்
சித்தான சித்தருக்குங் கீர்த்திசெய்தார்
மயலான பெண்மையைக் கன்னைக்குத்தி
மனமான முதுகன்றால் மனக்கல்பூட்டி
நியமான நந்திசிவா னந்திபாதம்
நிற்குணமாய்க் கண்டறியத் தெண்டம்பண்ணி
மயமான வமுதமடா வுண்ணச்சொல்லி
மவுனதத்தாற் பேர்சொல்லி வழிசொன்னாரே. (75)

வழிசொல்லு முன்னேதான் பட்டபாடு
வழியோடே சொல்லவென்றால் வெகுநாட்செல்லும்
தெளிவில்லாப் புலமாகி யன்றுகொண்டு
தேசத்தில் வாய்வினை பேசிப்பேசி
அளியான சேற்றில்மன மழன்றேனப்பா
ஐம்பொறியாற பரியைவிட்ட மிச்சமாகி
வெளியேறி வருகையிலே வாதவூரில்
வேதியன்போ லென்குருவும் வந்தார்பாரே. (76)

பாரப்பா அவ்வூரி லையனையன்
பண்பாம்வே தியனுந்த யாதியென்முன்
ஆரப்பா தாயாதிப் பங்குதன்னை
ஆர்கொடுப்பா ரென்னோடே பிறந்தாருண்டோ
சீரப்பா வேதியன்று ன்னைப்பார்த்துச்
சீதனமோ உன்தேட்டு வெங்கேயென்றான்
பேரப்பா சொல்லறியே னையன்சொன்ன
பேச்சாலே பிரட்டெல்லாங் கண்டேன்பாரே. (77)

கண்டேனே வேதியர்கள் கண்டபோதே
கருப்பெல்லாம் வெள்ளையடா சிவப்பிறப்பச்சை
பண்டேனு னறியாமற் றிகைத்தின்றாய்ப்
பார்க்கேனுன் றாயாதிப் பச்சைக்காணேன்
தொண்டனென வேதியரைத் தொண்டுபண்ணிச்
சொன்னதினாற் றாயாதிப் பச்சைக்கண்டேன்
உண்டேனுன் றாயாதிப் பச்சைக்கண்டு
உண்மையிலே சொர்ணந்தான் போற்றினேனே. (78)

போற்றினேன் றாயாதி யென்றுசொன்ன
பூணநூல் வேதியன்றன் காலைப்பார்த்துப்
போற்றினேன் மூக்காலும் அங்கைரெண்டும்
பூட்டினேன் வெட்டினைசை பூண்டேன்காலைப்
போற்றினேன் காவிவிசைய யொட்டியொட்டிப்
போய்ப்பற்றிப் பிடித்தனடா முத்திகாண
மாற்றினே னுலகத்திற் சாத்திரமெல்லாம்
மாண்டுமனம் பார்த்தனடா பார்வைதானே. (79)

பார்வையிலே வெகுசூக்கு விராவிரதர்
பார்த்தக்கா லருணகிரி மிச்சமப்பா
பார்வையிலே யிவர்களுட பார்வைரெண்டும்
பகாரிது கதிர்மதியா யொன்றேபார்வை
சேர்வையிலே சுழினையடா சத்திபார்வை
சித்தருக்குள் இருப்புமாய் கண்டபார்வை
கூர்மையிலே கூர்மையடா முதுகன் கூர்மை
குருடனுக்கு வழிகாணுங் குழிதான்பாரே. (80)

குழிபாருங் கிழாறுந் தூலமூலம்
கொள்மூல மூச்சேறி னூற்காணப்பா
குறிபாரும் நாலுநாற் காலுக்கல்லே
குற்றமில்லை மேல்மூலம் பின்னேபாரு
அறிவாகு மூலமுத லஞ்சம்பாரு
அண்டமடா கண்டவரை யஞ்சமொன்றும்
நெறியாக ஐபஞ்சா யஞ்சம்பார்க்க
நிலைத்தவஞ்ச மூன்றுமொன்றாய் நிலைத்ததாமே. (81)

நிலைத்தாக்காற் காலுதித்த நிலைபுரட்டி
　　நெருப்பாறு மயிர்ப்பால மப்பாற்சென்று
மலைத்தாக்கா லொன்றுமில்லை மனதேகொண்டு
　　மதியத்திற் காலகதிப் கலையுண்டா
உலைத்தாக்கா லுறைகயிலே தக்கியமு
　　ஓங்காரோ பற்பமடா குருவெல்லாம்
சிலைதாக்குங் கதிரோறும் வசிசிமெளனி
　　சிவசிவா காலற்றையும் வாசியோகமே. (௩௨)

வாசியடா கைவாசி வாட்டத்தில்
　　வதனம்சட் கோணமுக் கோணப்பா
தேசியடா வுதையகிரி வட்டமேறிச்
　　சிவசிவா வென்றல்லோ பாரப்பார்
நாசியடா கண்ணுக்கு செவியுங்கேட்க
　　நாலுமது காலாகி வக்கும்சி
வீசியடா வாய்பேசி விசுப்பினம்
　　வீதியிலே யறிவீதி யட்டமேறு. (௩௩)

வட்டமடா சூரியனை சந்திகந்தி
　　மதியாலே யுள்ளமதில் மதியமுறும்
வட்டமடா பிரணவமே யோகவட்டம்
　　மவுனமடா நாதாக்கள் சொல்லார்சொல்லார்
வட்டமடா ஆதியிற்கண் வட்டமாகி
　　மனக்கண்ணால் வேதாந்தம் பார்த்துமார்க்கம்
வட்டமடா சன்மார்க்கம் நன்மார்க்கந்தான்
　　வந்தவிந்த மெந்தவிந்த மந்தம்பாரே. (௩௪)

அந்தமடா ஆதிமுத லவ்வுஞ் சவ்வாய்
　　அந்தகுறி யட்சாங்க ளல்லவல்ல
அந்தமடா முடிந்தவிட மறியப்போமோ
　　ஆதியென்ற நாதத்தால் விந்தையந்தம்
சொந்தமடா வுண்கொண்ட காயந்தன்னில்
　　தூலமுடன் சூட்சமுமாய் நின்றதேகம்
வந்தவிந்த மறியாமல் மாண்டேபோனார்
　　மவுனமடா பிள்ளைகளே சொல்லக்கேளே. (௩௫)

சொல்லையிலே தெரியாட்டாற் றொட்டுக்காட்டு
தொட்டுமே காட்டையிலே தெரியாவிட்டாற்
கொல்லையிலே கூட்டிப்போய்க் கையைக்கொண்டு
குட்டிட்டுக் கைகொண்டு திரமாய்ச்சொல்லு
செக்கலையிலே யிப்படியுந் தெரியாவிட்டாற்
செப்பக்கேளின்னமொன்று தெரியச்சொல்வேன்
அல்லையடா சொன்னுசிற்றன் வில்லைக்கொண்டு
அந்தமிழி தெரியவன்பாற் கண்ணையெய்யே. (86)

எய்யையிலே முச்சாறு மெய்ந்தபாரு
இப்படியுந் தெரியாட்டா லினிமேற்கேளு
கையதிலே யிருந்தவன்னி யாறிப்போட்டுக்
கந்தபமே போபோவென் றடித்துத்தள்ளு
செய்யதிலே அறுகனையுங் கண்டுபாலை
சேத்திரமாய்த் திருப்பியதை வெள்ளையாக்கி
ஐயதிலே சத்திரனி லுருக்கிக்கொள்ள
ஆதியந்தச் சதானந்தி யாகுந்தானே. (87)

சதாசிவரும் சத்திகுரு வென்றேநின்று
சலியாதே சலியாதே குருவைக்காணு
மதாமிர்தமா யிருக்காதே செவியேகேளு
வாக்கான நாக்காலே நாலேகூவும்
பிதாவாதி நாதாந்த மூர்த்தியென்று
பிசகாதே முக்காலும் வாசிவாசி
சதாசிவமுங் கண்டுசிக் கண்ணோகண்டாய்ச்
சாவான காலையுந்தா னுள்ளன்பாலே. (88)

உள்ளன்போ டுந்சுபதை யுள்ளக்கொண்டு
உருக்கிவிடு மனதுருக வுருக்கமாகும்
கள்ளன்பு வையாதே யுள்ளங்கண்டாய்க்
கனிந்துவிடுந் தெளிவான மணியாங்கண்ணில்
உள்ளின்ப மிதுவாம்பே ரின்பமாகும்
உத்தமனே பொய்யலவே உண்மைஉண்மை
விள்ளன்பாய் விள்ளாதே யமுதங்கொள்ள
வெளியாகு மொளியாகும் மேவுங்காலே. (89)

அறிவதற்குக் கால்முதலாய் முக்கால்மூலம்
அப்புமுத லுப்பாமுப் பூவுஞ்சொன்னேன்
அறிவதற்கு முத்தியுமே யொன்றாய்ச்சொன்னேன்
ஐபொரங்கள் கொங்கணரே ஆதியென்று
அறிவதற்கு முக்கண்ணாங் கண்ணூற்பத்தும்
அடிமூலம் பார்ப்பதற்குக் கண்ணைச்சொன்னேன்
அறிவதற்குப் பேரின்ப வீடுஞ்சொல்லி
ஆராறு மறுமுகம்மேல் முனையென்றேனே. (94)

முனைபார்க்கும் பார்வையின்கண் முதுகண்சூட்சம்
முழிகண்ணிற் குருடான முனையுஞ்சொன்னேன்
தனையறியத் தாய்பதமுந் தனமுஞ்சொன்னேன்
தன்னியத்திற் பால்வன்ன ரூபஞ்சொன்னேன்
மனையான ஆறுதல மனையுஞ்சொன்னேன்
வழிதுறையும் நிரைநிரையாய் வகுத்துச்சொன்னேன்
அனையான தாயாதி பங்குஞ்சொன்னேன்
அமுதுகண்ணில் காலுதான் வழிசொன்னேனே. (95)

சொன்னேனு றுதிபுலி யூர்க்குப்பாதை
சுற்றத்தார் புற்றில்வா ளரவுஞ்சொன்னேன்
சொன்னேனு னக்கரவு விஷங்களெல்லாம்
சுகமாகும் மூலிகையின் கருவுஞ்சொன்னேன்
சொன்னேனுன் முன்னேறிப் பின்னும்பாரு
சூட்சமதில் வெளிமேதாணக் கருவுஞ்சொன்னேன்
சொன்னேனுன் கருவெல்லாங் கருத்தாலுள்ளே
சோதித்துக் கருப்பாரு சோதிகாணே. (96)

சோதியடா நாதாந்தச் சோதிசொன்னேன்
சுருக்கமடா கடுஞ்சுருக்கு விந்தேதொந்தம்
ஆதியடா விந்தான தொந்தம்பாரு
அந்தரங்கஞ் சொல்லாதே அய்யாவைய்யா
நீதியடா பேர்பாதி யென்தாயாதி
நின்பங்கு மென்பங்கும் நினைவாய்வாங்கு
பாதியிலே பலபாதி சூட்சமப்பா
பக்கத்திற் சொல்லாதே பங்கைவாங்கே. (97)

வாக்கையிலே ருட்சமுடன் வாவாவென்றால்
மாம்பொருக்க வையகத்திற் சீச்சீயென்பார்
நீங்காதே நிக்கவருள் காலமையா
நித்திரையிற் புத்திவரும் சிவவுதிக்காப்
பாங்கான சொன்னையிற் பூசைதன்னிற்
பழுத்தகனி கனிந்துவிழும் பண்புபோகும்
பூங்காவுங் காவலடா புத்தியன்மெத்த
புற்றாவு மடியாமற் புத்திப்பாரே. (98)

புத்திரரை முன்சொன்னேன் பின்னுஞ்சொன்னேன்
பொய்யென்று சொன்னக்கால் புத்திரசம்
புத்திரனை சொன்னேனு வித்தாரம்
போற்றிப்பார் சாயுட்ச பதமுமெய்தும்
புத்திடா னென்றுசொல் குருவாய்நின்று
பொதிகைமுனி குருவினந் சொன்ன புத்தி
புத்தியடா நம்பிப்போற் கொள்ளார்தான்
புத்திகெட்ட பெருமையெய்தப் புறமைகாணே. (99)

காணாத கண்காணும் முத்திகாணும்
கயிலாசச் சொர்க்கமடா பதவியுண்டாம்
தோணாத ருத்திரங்கள் மூன்றால்ருட்சம்
தோணுமடா யின்னூலிற் சொன்னேன்கண்ணே
பூணாத பூணூலா மின்னூல்தானும்
பூவாகும் வாசமடா சுவாசத்தங்கம்
வீணாகப் போகாது தொக்கத்தாதி
வேதாந்த ருத்திரத்தின் கண்தான்முற்றே. (100)

கடைப்பிள்ளை சிவயோகஞானம் 100

முற்றிற்று.

---

மதுரை டின்டிக்கல்ரோட் சிவராஜயோகி பங்காரு சாமியார் அவர்கள் குமாரர் முத்தியாலு நாயுடு அவர்களிடம் வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

முருகன் துணை.

அகஸ்தியர்

கடைப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய

# கலைக்கியானம் 120.

ஓமென்ற மூலகண பதியைப்போற்றி
        உறுதியுள்ள கொங்கணவர் பதமேற்கொண்டு
ஆமென்ற பூரணமாங் கலைஞானத்தை
        அதிக்குமதி ரவியினுட கலையைப்போற்றி
நாமென்ற சுழினைவழிக் குள்ளேசென்று
        நாதாந்தம் வேதாந்தம் நன்றாய்ப்பார்த்துத்
தாமென்ற சங்கற்ப விகற்பம்போக்கி
        சகலகலைக் கியானபூரணங்கொண்டேனே.

கொண்டேனே னப்போது குருவாய்நின்ற
        கொங்கணவர் மனமகிழ்ந்து வாவாவென்னச்
சென்றேனே னந்தநிலை தன்னைப்பார்த்துச்
        சேயான கடைமணியே தெளிவாயென்னக்
கொண்டேனே னவருடைய பாதம்போற்றிக்
        குறித்துமிகத் திருவடியைப் பூசைசெய்து
மண்டலமூன் றிலிநிறைந்த கலைக்கியானத்தில்
        வாழ்க்திருவென் றனுக்கிரகம் வசனித்தாரே. (1)

வசனித்து அனுக்கிரக வார்த்தைபெற்று
        மார்க்கமுடன் உட்கிரக மார்க்கங்கண்டு
நிசனித்த ஆதார மூலங்கொண்டு
        நிலைதவறாக் கலையறிந்து முடிமேற்சென்று
திசனித்த சுழிமுனையில் நிற்கும்போது
        திருவாசி வாசியென்ற கலையைக்கண்டேன்
பசனித்த கலையறிந்து மைந்தாநானும்
        பாடினேன் பன்னிரண்டு பத்துதானே. (2)

உருவறிந்து ஓசையிலே கணபதிவல்லபையும்
ஒளிவிளக்காய் நிறைந்தவெளி யுடனேகாணும்
கருவறிந்து அவ்வெளியி லொளியாய்நின்று
கருணைபெற ஓங்கிலி யங்கென்றோது
தெருவறிந்து ஓங்கிலி மங்கென்றோது
சிவசிவா ஓங்கிலி சிங்கென்றோது
குருவறிந்து செய்ததினால் மைந்தாநீயும்
கூர்மையுடன் ஓங்கிலி வங்கென்றோதே. (7)

வங்கென்று வோதியபின் மைந்தாகேளு
மார்க்கமுட னோங்கிலி யங்கென்றோது
எங்கும்நிறைந் திருந்தபஞ்ச கர்த்தாவங்கே
ஏகநிரா மயமான சொரூபங்காணும்
சங்கையுடன் ஓம்சிறீங் றிங்றீங்கென்னச்
சணத்திலொளி ரவிமதியைக் காணலாகும்
மங்களமாய் நித்தியமும் விடியச்சாமம்
மார்க்கமுடன் றனெழுந்து வகையாயோதே. (8)

வகையறிந்து ஓசையிலே மைந்தாகேளு
மகத்தான பஞ்சகர்த்தா ரவரோடொக்கத்
தகையாத ரவிமதியோ டெழும்பரும்
சங்கையுடன் தன்னொளியிற் காணலாகும்
நகையாமல் மனதடங்கி விடியச்சாமம்
நாட்டமுடன் றனெழுந்து நன்மையாகத்
திகையாமற் றனிருந்து ஆறாதாரத்
தெரிசனையிற் கட்டளையாய்த் தினமும்நோக்கே. (9)

நோக்கமுடன் தானிருந்து மனக்கண்கொண்டு
நுண்மையுடன் ஆதார தியானம்பண்ணி
வாக்குமனம் ஒன்றாக மைந்தாமைந்தா
மனதடங்கிச் சுழிமுனையில் வங்கென்றோட்டி
தாக்கிமன தறிவாலே நின்றலையா
சணத்திலே சுழினைவழி தானேகாணும்
பாக்கியமாய் சுழினைவழி கண்டால்மைந்தா
பத்தியுடன் வாசிசிவ யோகஞ்செய்யே. (10)

ஒன்றான ஓங்காரம் சகலத்துக்கும்
உடலுயிரும் பொருளான உறுதியாகி
நன்றான முப்பொருளு மொன்றாய்நின்று
நாடகமாய்த் திருநடனம் நன்றாயாட்டிக்
குன்றாத முக்குளிகை தானுமாகிக்
குருவான திருமூர்த்தி முப்பாழாகி
நின்றாடக் கொண்டதொரு நாடிமூன்றாய்
நிறைந்ததுவும் மறைந்ததுவும் மாயந்தானே. (15)

மாயமென்ற வாழ்க்கையிலே உபாயமாக
மைந்தனே தானிருந்து மார்க்கமாகக்
காயமென்றே கருவிகளை யறிந்துகொண்டு
கலையான ரவிமதியின் கலையைப்பத்தி
நேயமுடன் கண்டமதி லங்கென்றாணி;
நீமகனே வங்குசிங்கு வங்கென்றேதான்
தாயகமாய்க் கால்மாறி நடனங்கொண்டால்
சதாபோத யோகசிவ வாழ்வுதானே. (16)

தானான வாழ்வுசிவ யோகவாழ்வு
தன்மையுள்ள அஷ்டாங்கச் சித்துவாழ்வு
கோனான குருவருளால் தான்றானாகிச்
குருவான கலையறிந்து கலைமேற்கொண்டு
தேனான நவக்கிரக பூசைசெய்து
சிவசிவா இல்லறத்தைச் சுத்திபண்ணி
நானான அகபிருத்தி யேகமாக
நாட்டமுடன் பூசைமடந் தன்னுட்செல்லே. (17)

செல்லடா பூசைமடந் தன்னுட்சென்று
சிவாவெனவே செலமெடுத்துப் புரோசித்தப்பால்
மெல்லடா வடமுகமா யிருந்துகொண்டு
மேன்மையுட னீசான முகூர்த்தங்கொண்டு
சொல்லடா சிவயநம வென்றுசொல்லித்
சத்தமுடன் விபூதியைநீ கையில்வாங்கி
நில்லடா பலகையின்மேல் நிறுத்திமைந்தா
நீமகனே நவகோணம் நன்றாய்ச்செய்யே; (18)

செய்யடா நவகோணம் நன்றாய்ச்செய்து
　　தீர்க்கமுட னதுமேலே விந்துசாத்தி
மெய்யடா நால்வாசல் கோட்டைசெய்து
　　மேன்மையுள்ள நவகோணம் நடுவைமைந்தா
கையடா தவறுமுக் கோணத்துள்ளே
　　கருணைபெற வட்டவிந்துக் குள்ளேபோடு
வையடா ஓம்றீங் கென்றுசாத்திக்
　　மார்க்கமுட னெட்டெழுத்து வகையாய்ச்சாத்தே. (19)

சாத்தியே நவகோணக் தன்னில்மைந்தா
　　சங்கையுடன் நவகும்பந் தன்னைவாங்கிப்
போத்தியே கும்பமெல்லாம் நூலணிந்து
　　பூரணமாய் மனமிருத்திச் சவாதணிந்து
பாத்திபனே மாங்குழையுந் தேங்காய்சாத்திப்
　　பதிவாகக் கும்பமெல்லா மாடைசாத்தி
நேத்திரத்தின் பேரொளியாய் நவகோணத்தில்
　　நீமகனே கும்பமெல்லாம் நிறுத்திடாயே. (20)

நிறுத்தியந்த நடுவான கும்பந்தன்னில்
　　நேர்மையுடன் பரித்தகடு நன்றாய்ச்செய்து
கருத்துடனே பரித்தகட்டில் மைந்தாகேளு
　　கருணைபெற ஓம்கிலீயுங் கிறீங்கென்று
திருத்தமுடன் நடுவான கும்பந்தன்னிற்
　　றிருவான பரித்தகட்டை அதனுட்போட்டு
மருத்திருந்த கும்பமெல்லாஞ் சொர்னபுட்பம்
　　வரிசையுடன் தானிருத்தி மலர்கள்தூவே. (21)

தூவிநன்றா [illegible]முதாசவர்க்கம்வைத்துச்
　　சுத்தமுடன் தாம்பூலந் தேங்காய்சாத்தி
ஆவலுடன் நாலுபுறந் தீபம்வைத்து
　　அன்பாகச் சற்குருவைத் தியானம்பண்ணித்
தேவிபரி பூரணியே யென்றுபோற்றிச்
　　சிவசிவா நவகும்பந் தனக்குமைந்தா
பாவகமாய்ப் பூசைபண்ணித் தீபதூபம்
　　பத்தியுடன் சோடசமாய்ப் பூசைபண்ணே. (22

பூசையென்ன மானதமாய்ப் பூசையாகும்
புத்தியுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
ஆசையுடன் செபதவங்கள் தியானஞ்செய்து
அருள்வளர மனதுருக அன்பாய்நீயும்
நேசமுடன் தோத்திரங்கள் நன்றாய்ச்செய்து
நிமலனுட விபூதியைநீ தரித்துக்கொண்டு
பாசபிர தமையுமுதல் நவமிமட்டும்
பத்தியுடன் நவநாளும் பூசைபண்ணே. (23)

பண்ணப்பா நவநாளும் பூசைபண்ணிப்
பரமகுரு சீர்பாதம் பணிந்துபோற்றி
விண்ணப்பா நோக்கிநவ கோணஞ்செய்த
விசையான விபூதியைநீ யெடுத்துவைத்து
உன்னப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
உடம்பெல்லாந் தூளிதமா யணிந்துகொண்டு
கண்ணப்பா தானோக்கி யுலகோர்க்கெல்லாம்
கருணையுடன் விபூதியைநீ கடாட்சஞ்செய்யே. (24)

செய்யப்பா விபூதியைநீ கடாட்சித்தாக்காற்
சிவசிவா நவக்கிரகத் தோஷந்தீரும்
தையப்பா பண்ணிவிக்குங் குணமுந்தீரும்
நஞ்சான விஷமுதலாய் நாடாதோடும்
வெய்யதொரு பிணிகளெல்லாம் வீறிட்டோடும்
விதமான நோய்களெல்லாங் கதிகெட்டோடும்
கொய்யப்பா வந்தகூற் றுவனும்போவான்
குருவான சற்குருவின் பாதம்போத்தே. (25)

போத்துவது குருபதத்தைப் போற்றவேணும்
பூரணமாய் வாலைபதம் பணியவேணும்
பாத்திபனே சுழிமுனையை அறியவேணும்
மதிவான வாசியிலே பதியவேணும்
ஆத்துமத்தின் செயலறிந்து ஆறுதாரம்
அடங்குமந்த நிலையறிந்து வொடுங்கவேணும்
காத்துநிலை தனையறிந்து ஒடுங்கினாக்காற்
கயிலாச தேசமடா தன்னைப்பாரே. (26)

திரம்பெற்ற மகிமையையா னறிந்துகொண்டு
சிவசிவா வென்றகலைக் கியானந்தன்னை
உரம்பெற்ற சிந்தைபனி ரண்டுபத்தும்
ஒடுக்கமென்ற கலைக்கியான் முறுதிசொன்னேன்
வரம்பெற்ற பெரியோர்க ளெடுத்துப்பார்த்து
வலமிடமாய் நின்றகலை வாசியேறி
சிரம்பெற்ற தெளிவதனா லமுதங்கொண்டு
தேவிபரி பூரணியைப் பூசைபண்ணே. (31)

பூசையென்ன மதியமுத முண்ணவேணும்
பூரணமாய்ச் சாஸ்திரங்கள் பார்க்கவேணும்
ஆசையுடன் வாசியிலே மனதுவைத்து
ஆதார தெரிசனையை யறியவேணும்
ஓசையுட னாதார நடனங்கண்டு
உண்மையென்ற விடமறிந்து வொடுங்கவேணும்
பாசையென்ற பலபாஷை பதினெண்பாஷை
பயனறிந்து சாஸ்திரத்தைப் பணிந்திடாயே. (32)

பணியவென்றாற் குருபதத்தைப் பணியவேணும்
பரமகயி லாசவரை காணவேணும்
கணியவென்றால் வாலைபதங் கணியவேண்டும்
காலான வாசியிற்சென் றேறவேணும்
மணியான மனோமணியைக் காணவேணும்
மகத்தான சுழிமுனையில் மனக்கண்சாத்தி
அணியான ஆதார சிவாலயத்தை
அங்கமுடன் பூசித்தோன் சித்தன்றானே. (33)

சித்தமுட னிந்நூலைப் பாடினானும்
சிவசிவா நந்தியிடம் செப்பினேன்யான்
சுத்தமுட னவர்பார்த்து மூலர்க்கீய்ந்தார்
சுகமாக மூலர்கா லாங்கிக்கீய்ந்தார்
பத்தியுடன் காலாங்கி போகர்க்கீய்ந்தார்
பரமான போகருமென் குருவுக்கீய்ந்தார்
வெத்தியுள்ள வென்குருவும் நன்றாய்ப்பார்த்து
வேதமே வுலகமெல்லாம் நிறைந்திட்டாரே. (34)

நிறைந்திட்டே னிந்நூலை யுலகத்துள்ளே
நேரறிந்து சொல்லுதற்கு மனம்பேசாது
உறைந்திட்டே னுலகமெல்லாம் நானேநானாய்
உந்தமருக் குண்மையா யுறுதியாகும்
மறைந்திட்ட தெதினாலே யெந்தன்சாபம்
மார்க்கமுடன் தீர்த்தாக்கால் வளருந்தீட்சை
சிறந்திட்ட பூசையினா லதிகமாகும்
சிவசிவா வாலைகற்பந் திறமாயுண்ணே. (35)

உண்ணப்பா வாலைபதம் பணிந்துகொண்டு
உத்தசிவ யோகமதி னுறுதியாக
நண்ணப்பா ஆதார தியானசூட்சம்
நன்மையுடன் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
விண்ணப்பா நோக்கிஓம் கிலிஅங்கென்று
விநாயகனைத் தியானித்து அப்பால்மைந்தா
கண்ணப்பா நிறுத்திஅங் கிலிநங்கென்னம்
கருணையுடன் பிரமனுட தியானமாச்சே. (36)

ஆச்சப்பா பிரமனுட தியானம்பண்ணி
அதின்பிறகு நங்கிலி மங்கென்றோத
நீச்சப்பா மாலினுட தியானமாச்சு
நிசமாக மங்கிலி சிங்கென்றோது
மூச்சப்பா ருத்திரனுட தியானமாச்சு
முனையறிந்து சிங்கிலி வங்கென்றோது
பேச்சப்பா மயேஸ்பரத்தின் தியானமாச்சு
பெருமையுடன் வங்கிலி யங்கென்றோதே. (37)

ஓதவே சதாசிவத்தின் தியானமாச்சு
உத்தமனே அங்கிலி உங்கென்றோது
நீதமா மிரவியுட தியானமாச்சு
நிச்சயமாய் உங்கிலி அங்கென்றோதப்
பேதமிலா மதியினுட தியானமாச்சு
பிலமாக அங்கிலி மங்கென்றோதச்
சாதகமாய்ச் சுடரினுட தியானமாச்சு
சங்கையுடன் மங்கிலி ஓமென்றெண்ணே. (38)

என்னவே ஒளியினூட டியானமாச்சு
என்மகனே ஒப்பில்லி சித்திரமென்று
உன்னவே பாழ்வெளி தியானமாச்சு
உறுதியுள்ள வெளியோடே வெளியாய்நின்று
நன்னவே வெளியோடே ஒளியாய்நின்று
நாடெல்லாம வெளியேறிப் போகமற்றான்
துன்னவே உடலுறிந்து கட்டுக்கொண்டு
சோதிபணி வீடதுவே துலங்குவாயே. (39)

துலங்குமணி மண்டபமாம் புருவமத்தி
சோதியென்ற சுழிமுனையடா அண்டமேரு
இலங்கொளிவாய் நின்றபர மேருதன்னில்
இச்சையுடன் சிவசிவா யோகஞ்செய்யக்
கலக்கமில்லா மாதுரதி வாலைதன்னைக்
கருணைபெற அவள்பதத்தைப் பூசைபண்ணிப்
பலங்கனிந்த அமுதரச பானங்கொண்டாற்
பரப்பிர்ம ரூபமதாய் வாழலாமே. (40)

வாழப்பா யின்னமொரு வகைசேரு
மகத்தான மாதுரதி தனக்குமைந்தா
ஆழப்பா அமுதரச பானமூட்டி
அன்பான உபசார மநேகஞ்செய்து
மேலப்பா களபசந் தனங்கள்பூசி
மெத்தையின்மேற் றுளிநீத்தி மேன்மையாகக்
காலப்பா தான்பிடித்துக் கமலக்கண்ணிற்
கனிந்துவரு மமுதரச தேனைவாங்கே. (41)

வாங்கிநன்றாய்ச் சற்குருவைத் தியானம்பண்ணி
வளமையுடன் றன்போசிக்க இளமையாகும்,
ஓங்கிநின்ற வாசியது ஓடாதையா
உறுதியுடன் சுழிமுனையி லுகந்துநின்று
பாங்குடனே சிவயோகம் பதிவாய்நிற்கும்
பதிவாகக் கற்பூர தீபங்காணும்
பூங்கமல மாதுரதி பழக்கத்தாலே
புத்தியுட னொக்காரும் வாழலாமே. (42)

ஆமப்பா பின்னமொரு பாகங்கேளு
அருள்பெருகும் மாதாதிக் கன்பாப்நீயும்
நாமப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
நன்மையுடன் பாலமுது சீனிகூட்டி
ஓமப்பா நிலையறிந்து ஊட்டினுக்கால்
உண்மையென்ற மந்திரகலை யமுதமூறும்
தாமப்பா தன்னிலையிற் றானேநின்று
சங்கையுடன் கெங்கைதனை யுண்டபாரே. (43)

உண்டபா ரமுதரச கெங்கைதன்னை
உத்தமனே சத்தியமாய்க் கொண்டாயானாற்
கண்டபார் தேகமது ரவிபோற்காந்தி
காணுமடா பூரணத்தின கலையினாலே
நின்றபா ரண்டாண்டங் கண்ணிற்றோனும்
நிசமாக வாலைமன் மதன்போலாவாய்
கொண்டதொரு அமுதரச பானத்தாலே
குடியிருப்புப் பிலத்துதடா குருவைக்காரே. (44)

காரப்பா பின்னமொரு கருவைக்கேளு
கற்புடைய மாதாதி தனக்குமைந்தா
நேரப்பா பருத்திவிதைப் பாலைவாங்கி
நிசமாகச் சர்க்கரையுந் தேனுங்கூட்டிச்
சாரப்பா அதில்விட்டுப் பிசைந்துகொண்டு
சங்கையுடன் மாதுதனைக் கூட்டிமைந்தா
பேரப்பா கொண்டதொரு அமுதங்கொண்டாற்
பேரண்டஞ் சுத்திவாக் கெவுனமாமே. (45)

ஆமப்பா கெவுனரச பானந்தன்னை
ஆத்தாளை யனுதினமும் பூசைபண்ணி
நாமப்பா சொல்லுகிற லகிரியூட்டி
நன்மையுடன மெத்தைதனிரித் தொலுதுபோட்டுத்
தாமப்பா தன்னிலையிற் றானேநின்று
சங்கையுடன் கைக்கரணந் தானேசெய்தாற்
காமப்பால் வடிந்தொழுகு மந்தத்தேனைக்
கருணையுடன் பீங்கானில் வாங்கிக்கொள்ளே. (46)

வாங்கியே காமகளைத் தன்னிலேதான்
மகத்தான குங்குமகஸ் தூரிமஞ்சள்
பாங்குபெறக் கோரோசனைப் புனுகுகூட்டி
பத்தியுடன் றரைத்துத் திலதம்போட்டு
ஆங்காரங் கொண்டதொரு மிருகந்தன்னை
அதட்டிநீ பார்க்கவது அசந்துபோகும்
தீங்கான சத்துருக்கள் வசியமாகும்
திருவான லெட்சுமியும் வசமாவாளே. (47)

வசமான சத்தியடா வென்தாய்தேவி
மகத்தான சோதியடா மாயாரூபி
தேசமான தீட்சையிலே வெளியாய்நின்று
சிந்தைதன்னில் நினைத்தபடி தீர்க்கஞ்செய்வாள்
விசமான கொடுமைகளை யகற்றிநல்ல
மெய்ஞ்ஞான மானசிவ யோகம்பெற்று
நிசமான பூரணமாங் கலைக்கியானத்தை
நீமகனே அந்திசந்தி நினைவாய்ப்பாரே. (48)

பாரப்பா பதியறிந்து நினைவாய்ப்பார்த்தாற்
பத்தியுட னுறுதலம் பதிவாய்த்தோணும்
நேரப்பா ஆதார நிலையிய்நின்றால்
நிசமான சுழிமுனையிற் றீபங்காணும்
காரப்பா சுழினையிலே தீபங்கண்டாற்
கருணைவளர் சிவயோகங் கைக்குள்ளாகும்
சாரப்பா சிவயோகத் திருந்துகொண்டு
சதாபோத மானசுழி கண்ணைக்காணே, (49)

காணவே யின்னமொரு கருமானங்கேள்
கருணைவளர் சந்திரகலை அகாரமாச்சு
பூணவே பானுகலை உகாரமாச்சு
பொருந்திநின்ற சுழினையிலே மகாரமாச்சு
தோணவே மூன்றுதிரு நேத்திரந்தன்னைச்
சுத்தமுடன் றான்பார்க்க வேகமாச்சு
பேணவே யேகமென்று தன்னைப்பார்த்தாற்
பிலமான ஓங்காரக் கம்பமாச்சே. (50)

